

ரௌத்ர – ஆனி 32

15 – 7 – 1980

நாடி 3 "எண்ணிய முடிதல் வேண்டும்; நல்லவே எண்ணல் வேண்டும்." சுவடி 4

# தசாபுக்தி பலன்களும் கோசார பலன்களும்

தசாபுக்தி பலன்கள் மிகவும் முக்கியத்துவம் உள்ளவை என்பதையும், இரண்டாவது நிலையே கோசார பலன்களுக்கு அமையும் என்பதையும் நாம் முதலில் உணர்ந்து கொள்ள வேண்டும்.

நமது பிறந்த ராசிக்குக் குறிப்பிட்ட நேரத்தில் எந்தெந்த ராசியில் கிரகங்கள் சஞ்சரிக்கின்றன என்பதை ஒட்டிப் பலன் பார்ப்பதுதான் கோசாரம்.

மொத்தமுள்ள 12 ராசிகளில் பிறந்தோருக்கும் இந்தக் கோசார அடிப்படையில் கூறப்படும் பலன்கள் பொதுப்பலன்களாகவே இருக்கும்.

ஒருவர் மகர ராசியில் பிறந்தவர் என்று வைத்துக் கொள்வோம்.

வியாழன் அஷ்டமத்தில் உலவும்போது – அந்த மகர ராசியில் பிறந்தவருக்குக் காலபலம் சரியில்லை என்று கூறவேண்டும்; அப்படித்தான் ஜோதிடர்கள் கூறுவார்கள்.

மொத்தமுள்ள 12 ராசிகளில் ஒன்று மகரம். மொத்தமுள்ள பிரஜைகளில் சராசரி 12-ல் ஒரு பகுதியினர் மகர ராசியில் தோன்றியிருக்கக் கூடும் என வைத்துக் கொள்ளலாம்.

பல கோடிக்கணக்கான பேர்கள் மகர ராசியைச் சேர்ந்தவர்களாக இருக்கக் கூடும்; அல்லது சில கோடிக் கணக்கானவர்கள் மேற்படி மகர ராசியைச் சேர்ந்தவர்களாக அமையக் கூடும்.

இத்தனை பேர்களுக்கும் குரு அஷ்டமத்தில் வந்தால் கெட்ட பலன்கள் தான் உண்டாகும் என்பது கோசாரப் பலன்.

ஆனால் ஒரே மாதிரி பலனைப் பல கோடிக்கணக்கானவர்களுக்குப் பொதுவாகச் சொல்லும்போது – அதில் மாற்றம் உண்டாக இடமுண்டு.

அஷ்டம ராசியில் குரு சஞ்சரிக்கும் காலத்தில் – சில மகர ராசிக்காரர்களுக்குக் கஷ்டங்கள் அதிகமாக இருக்கும்; வேறு சில மகர ராசிக்காரர்களுக்கும் கஷ்டங்கள் குறைந்திருக்கக் கூடும்.

மேலும், சில மகர ராசிக்காரர்களுக்கு அஷ்டமத்தில் குரு உலவும் காலத்தில் திருமணம் ஆகக் கூடும். பதவி உயர்வு ஏற்படக் கூடும். பலவித நன்மைகள் ஏற்பட்டு விடவும் கூடும்.

இது எப்படி என்று கேள்வி எழும்!

இங்கேதான் அடிப்படைத் தத்துவம் என்ன என்பது பற்றி ஆராய்ந்து உணர வேண்டும்.

அஷ்டமத்தில் குரு சஞ்சரிக்கும் காலம் சரியில்லாத காலம்தான் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் குரு அஷ்டமத்திலே இருக்கும் அதே காலத்தில் ஏனைய கிரகங்கள் நல்ல இடங்களில் சஞ்சரிக்கக் கூடும் அல்லவா!

குரு தனது கெட்ட இடத்துச் சஞ்சாரத்தால் தீங்கு தருவதைப் போல, இதர கிரகங்கள் தங்களின் நல்ல இடத்துச் சஞ்சாரத்தால் நற்பலன் களைத் தரக் கடமைப்பட்டவர்கள் அல்லவா?

ஆகையால் கோசாரப் பலன்களை முடிவு செய்யும்போது, 9 கிரகங் களின் சஞ்சாரத்தையும் எடை போட்டுப் பார்த்துப் பலன்களை நிர்ணயிக்க வேண்டும்.

அப்படிச் செய்தாலும் ஒரு ராசியில் பிறந்த சில கோடிக் கணக்கான வர்களுக்கு ஒரே மாதிரியான பலன்களை கோசாரப்படி சொல்லப்பட வேண்டி வரும்.

ஒரேமாதிரி சொல்லப்படும்போது அடிப்படையில் ஒருமைப்பாடு இருக்கத் தடையில்லை. ஆனால் அனுபவத்தில், அளவில், அதன் பரிமாணத் தில், வேகத்தில் வேறுபாடு இருக்கும்; ஏற்றத்தாழ்வு இருக்கும்.

ஜனன ராசிக்கு 9-ம் இடத்தில் குரு இருக்கும்போது புகழ், பொருள், சுபிட்சம் உண்டாகும் என்பது கோசார விதி.

9-ம் இடத்துச் சஞ்சாரம் பெற்ற குருவைக் கொண்டு சொல்லப்படுகிற அந்தப் பலன்கள் எல்லாருக்கும் ஒரே அளவில் ஏற்படும் என்று கூற முடியாது. சிலருக்குக் கூடும்; சிலருக்குக் குறையும்; இன்னும் சிலருக்கு முற்றிலும் மாறுபட்டு எதிர்மறைப் பலன்கள் கூட ஏற்பட்டு விடலாம்.

இப்படி மாறுபாடு ஏற்படலாமா என்று கேட்கலாம்! ஏற்படத்தான் செய்யும் என்பது பதில்.

தலைவலிக்கு அமிர்தாஞ்சனம் பூசினால் குணமாகும் என்பது பொது விதி. எல்லாவிதத் தலைவலிகளையும் அமிர்தாஞ்சனத்தால் நிவர்த்தி செய்துவிட முடியாது அல்லவா!

9-ம் இடத்துக் குரு கஷ்டங்களைப் போக்குவார் என்பது பொது விதி. எல்லாவிதக் கஷ்டங்களையும் 9-ம் இடத்துக் குரு போக்கி விடுவார் என்று எதிர்பார்ப்பதற்கு இயலாது.

அமிர்தாஞ்சனம் ஒரு பொதுவான நல்ல மருந்து.

9-ம் இடத்துக் குரு பொதுவாக நலம் புரியும் சக்தியுள்ளவர்.

இந்த அளவோடு எடுத்துக் கொள்ள வேண்டும்.

பொது என்பதும், சிறப்பு என்பதும் இரு நிலைகள்.

பொது நிலையிலிருந்து சிறப்பு நிலையானது மாறுபடும்; மாறுபடுத்தும்.

கோசார பலன் என்பது பொது நிலை.

தசாபுக்தி பலன் என்பது சிறப்பு நிலை.

அஷ்டமத்தில் செவ்வாயும் சனியும் குருவும் கூட ஒருவருக்குக் கோசார ரீதியாக உலவிக் கொண்டிருக்கலாம். இப்படி உலவும்போது மிகவும் மோசமான விளைவுகள் இடம்பெற வேண்டும் என்பது கோசார விதி.

ஆனால் அந்த நபருக்கு யாதொரு சங்கடமும் ஏற்படாமல் அதற்கு நேர்மாறாகப் பல நன்மைகள் அதே நேரத்தில் விளையக் கூடும்!

'என்ன இது? ஜோதிடம் பொய்யா? அஷ்டமத்துச் சனி, செவ்வாய், குரு — என்று கோசாரமுள்ள நேரத்தில் அவருக்கு எப்படி நன்மை ஏற்பட முடியும்?' என்று கேட்கலாம்.

இங்கேதான் தசாபுக்திகளின் முக்கியத்வம் உணரப்பட முடியும். குறிப்பிட்ட நபருக்கு மகாயோகமும் உச்ச நிலேயும் உள்ள சுக்ர தசையில் மிகவும் நல்ல இடத்தில் உள்ள சனியின் புக்தி நடக்கிறது என்று வைத்துக் கொள்ளுங்கள்! அல்லது வேறு எந்தக் கிரகத்தின் தசையானுலும் சரி புக்தியானுலும் சரி — அவை யோகபலமுள்ள தசை புக்திகளாகுமானல் — நற்பலன்கள் விளேயத்தான் செய்யும்!

தசாபுக்திகளின் பலம் அதிகமாகிவிடும்போது கோசார பலம் அதற்குள் அடங்கிவிடும்படி யாகிவிடும்.

ஒரு படி பாலில் ஓர் ஆழாக்கு தண்ணீரைக் கலக்கும்போது, தண்ணீரின் தனித்தன்மை எடுபடாது. பாலின் தன்மையே முன்நிற்கும்!

அதுபோல — தசாபுக்தி பலம் என்கிற மூலபலத்தின் முன், கோசார பலம் என்கிற தாற்காலிக பலம் நிற்காது.

இதில், மற்றெரு உண்மையையும் நாம் அறிய வேண்டும். கோசார பலன் என்பது அடியோடு இல்லாமல் போய்விடாது. அது தன் சுய ரூபத்தைக் காட்டத்தான் செய்யும்.

ஆனல், தசாபுக்தி பலன்கள் சிறப்பாக இருப்பதால், கோசாரத்துக் கெட்ட பலன்களின் தாக்குதல் பாதிக்காமல் போய்விடும்.

ஒரு படி பாலில் சேர்க்கப்பட்ட ஓராழாக்குத் தண்ணீர் அந்தப் பாலுக்குள் இல்லாமல் இல்லே! அந்தப் பாலின் விசேடத் தன்மையில் ஒரு மாற்றத்தை உண்டு பண்ணுமலும் இல்லே! ஆனல் பாலின் அளவு அதிகமாகி விட்ட காரணத்தால், அதன் சுவையை அழிக்கின்ற வல்லமை தண்ணீருக்கு இல்லே! இதுதான் உண்மை.

கோசார பலன்களும் தீமையாகி, தசாபுக்தி பலன்களும் தியவையாகுமானல், நிலேமை மோசம்தான்.

இரண்டும் நன்மை என்றுல் 'ஓகோ' என்ற நிலேதான்!

இரண்டில் தசாபுக்தி நிலேக்குத்தான் முதன்மையான ஸ்தானம்! அதற்காகக் கோசார பலன்களேப் பார்க்கத் தேவையில்லே என்பது பொருந்தாது.

கோசாரப்படி ஏழரைச் சனிக் காலம் வரும்போது — அவ்வப்போது சங்கடங்கள் தலே காட்டுவதைத் தவிர்க்க முடியது.

யோக பலமுள்ள தசாபுக்திகள் நடந்தாலும் கூட, ஏழரைச் சனியின் சேஷ்டை தொல்லேயை உண்டாக்காமல் போகாது. தசாபுக்திகளின் யோக பலத்தால், ஏழரைச் சனியின் உபாதைகளே தாங்கிக் கொள்ளும் வல்லமை நமக்கு ஏற்படும் என்ற அளவில் கொள்ள வேண்டும்.

ஒருவருக்கு ஒரு நேரத்தில் அஷ்டமத்தில் சனி, 6-ல் வியாழன் என்று வைத்துக் கொள்வோம். இதர கிரகங்களும் கோசார ரீதியில் சரியாக இல்லே என்று வைத்துக் கொள்வோம்.

இந்த மாதிரி கோசார நிலேயால் பலவிதத் தொல்லேகள் ஏற்படவே செய்யும். மிகவும் சக்தி வாய்ந்த தசாபுக்திகள் நடக்குமானல், மேற் சொன்ன கோசாரத் தொல்லேகளே ஈடுகொடுக்கும் ஆற்றலேச் பெற்று விடலாம்.

ஆகவே கோசார பலன்கள் நிகழாமல் போகா.

தசாபுக்தி யோக பலத்தால் அவற்றைச் சமாளித்து விடலாம் என்பதே அடிப்படைத் தத்துவம்.



# எண்ணும் எழுத்தும்

## எண் 5-ன் சிறப்பு

### உத்தமர்கள் - உழைப்பாளிகள்!

'5'ன் விசேடத் தன்மைகளில் மிகவும் முக்கியமானது, மற்ற எண்காரர்களுடன் நேசமாகப் பழகுகிற ஆற்றல் கொண்டிருப்பதாகும்.

முதல் நான்கு எண்களுக்கு அடுத்தும், பின் நான்கு எண்களுக்கு முன்னுமாக நடுவில் உள்ள எண் 5.

மொத்தம் ஒன்பதே எண்கள் தாம் அடிப்படை எண்கள் அல்லவா! அந்த ஒன்பது எண்களில் நடு நாயகமாக விளங்கும் எண் 5.

14 என்ற எண்ணின் கூட்டு எண் 5. இந்த 14-ம் எண்ணில் பிறந்தவர்கள் பெரிய மேதைகளாக இருப்பார்கள்; நியாயத்திற்கு மதிப்புத் தருவார்கள்; நகைச்சுவையுடன் பேசுவார்கள். தொழில் நுணுக்கம் தெரிந்த இவர்கள் 'பிஸ்னஸ்' இனங்களில் வெற்றி பெறுவார்கள்.

23 — என்ற எண்ணின் கூட்டு எண்ணும் 5.

இது விசேடமான வெற்றிகளைத் தரும் எண் என்பார்கள். அரசாங்க அந்தஸ்து, சுபிட்சங்கள், ஐசுவரியங்கள், பதவிகள் எல்லாமே இந்த எண்ணைத் தேடிவரும்.

32 — என்ற எண்ணின் கூட்டு எண் 5.

இது எல்லா '5' எண்ணையும் விட அதிசம் சிறப்புடையது. இந்த எண்ணில் பெயர் கொண்டவர்கள் வெற்றி பெறுவதற்கு முற்றிலும் தகுதியுடையவர்களாவார்கள். புதன் ஜாதகத்தில் உச்சமாக இருந்து — குரு போன்ற சுபகிரகங்களின் சேர்க்கை பெற்றிருப்பவர்கள் இந்த எண்ணில் சம்பந்தப்பட்டவர்களானால், மகத்தான அதிர்ஷ்டசாலிகளாகத் தடைபிராது.

41-ம் சுபிட்சமானதுதான்.

கூட்டு எண் 50-ல் பிறந்தோர் பெரிய கணக்கு மேதைகளாவார்கள். ஜோதிட விற்பன்னர்களாவார்கள்.

59 - பல துறைகளில் பாண்டித்யம் அளிக்கும்.

68-ஆன்மிகத் துறையில் ஞானம் உண்டாக்கும்.

கூட்டு எண் 5ஆக வருகிற அனைத்து எண்களுக்குமே அடிப்படையில் அறிவுத் திறன் சிறப்படைந்திருப்பது உறுதி. புதன் பலம் பெற்றிருப்பது அவசியமாகும்.

புதன் பாபக் கிரகங்களோடு சேர்ந்திருந்தால், அப்படிப்பட்டவர்கள் 5-ம் எண்ணில் பிறந்தவர்களானால், கெட்ட சகவாசத்தால் கெட்டு அழிவார்கள்.

புதன் சுபக்கிரக சம்பந்தம் பெற்று 5-ல் பிறந்தவர்கள், நல்ல சகவாசத்தால் மேன்மை அடைவார்கள்.

5-ம் எண்ணுக்கும் அற்புதமாகப் பேசுவோருக்கும் பொருத்தமுண்டு. நடுநிலைமை யுடையவர்களாவார்கள், 5-ம் எண்ணினர்.

5-எண்ணில் பிறந்தவர்களுக்கு கூட்டு எண் 5-ஆக வரும் ஆங்கில வருடங்களில் விசேடமான திருப்பங்கள் உண்டாகும். அதோடு புதிய நண்பர்கள் வந்து சேர்வார்கள்; அல்லது புதிய நண்பர்களை இவர்கள் சேர்த்துக் கொள்வார்கள்.

எல்லாத் தேதிகளுமே இவர்களுக்கு அனுகூலமானவை என்பார்கள். ஆனால் குறிப்பாகவும் விசேடமாகவும் சொல்லப் போனால் 5, 14, 23 தேதிகள் சிறந்தவை. 2, 11, 20, 29 தேதிகள் அனுகூலம் குறைந்தவை.

5-ம் எண்ணில் பிறந்தவர்களில் பலர் வாழ்க்கைப் போராட்டத்தில் ஈடுபட்டு முன்னணிக்கு வந்திருக்கிறார்கள். சிலபல அரிய சந்தர்ப்பங்களை இழந்திருக்கிறார்கள். மகா தைரியசாலிகளாக இருந்திருக்கிறார்கள். உலக விஷயங்கள் எல்லாவற்றையும் பற்றிக் கொஞ்சமாவது தெரிந்தவர்களாக இருந்திருக்கிறார்கள்.

5-க்கும் துணிவுக்கும் சம்பந்தமுண்டு; தெளிவு இவர்களது தனி உடைமை. மாறுபாட்டை விரும்பும் சுபாவமுள்ள 5-ம் எண்ணினர் மாற்றத்தில் ஏற்றம் காண்பார்கள். வேகமானவர்கள் இவர்கள்; விவேகமுள்ளவர்களும் கூட; உழைப்பாளர்கள்; உண்மையாளர்கள்; உத்தமர்கள்.

வாழ்க 5-ம் எண்ணினர்!

**வித்வான்**

# பரிகாரம்

என் நண்பர் ஒருவர்.

நல்லவர்; புத்திசாலி.

திட்டங்களை அழகாகத் தீட்டுவார்; அற்புதமாகவும் தீட்டுவார்; வேகமாகவும் தீட்டுவார்.

ஆனால் ஒரே ஒரு குறை அவரிடம் உண்டு.

அதுதான் தீட்டப்பட்ட திட்டங்களைச் செயற்படுத்துவதில் காட்டுகிற தாமதம்.

தாமதம் எப்போது தேவையோ அப்போதுதான் தேவை!

துரிதமாகச் செய்யப்பட்ட காரியத்தில். தாமதம் ஏற்பட்டால் விளைவு மோசமாகத் தடையிராது.

பால் பொங்குகிறது என்றும், ஒரு நொடிப் போதில் வழியப் போகிற நிலையில் அது மேலே வருகிறது என்றும் உள்ள ஓர் இக்கட்டான கட்டத்தில், ஆர அமர அதை அடக்க முனைந்து என்ன பயன்?

பொங்க ஆரம்பித்ததுமே — அதை வழிய விடாமல் நம் பணியைச் செய்து விட வேண்டும்! ஏனென்றால் அது அவசரமாகச் செய்யப்பட வேண்டிய பணி.

## நேரத்தில் செய்யும் பணி

ஒரு காரியத்தைச் செய்ய ஆரம்பிக்கு முன்பு பலமுறை யோசிப்பது அவசியம். யோசித்து முடிவு செய்துவிட்ட பிறகு, அதைச் செய்யாமல் தாமதிப்பதால் நலம் உண்டாகாது.

திட்டமிடப்படுகிற விஷயங்கள் பல விதமாக இருக்கலாம். சில திட்டங்களை விரைவில் அமல்படுத்த வேண்டியிருக்கும். சில திட்டங்களை பொறுத்து அமல் படுத்தலாம்.

பகுத்துப் பார்க்க வேண்டும். அதை அதற்குரிய நேரத்தில் செய்ய வேண்டும்.

அப்படிச் செய்தால்தான் ஏமாற்றம் தவிர்க்கப்படும்.

தூங்கவேண்டிய நேரத்தில் விழித்துக் கொண்டிருந்து விட்டு, விழித்திருக்க வேண்டிய நேரத்தில் தூங்கி விடுவது, காரியத்தைக் கோட்டை விடுவதாகும்.

எதையும் முன்னெச்சரிக்கையுடன் அணுகினால் விபரீதம் ஏற்படாது. விபரீதம் ஏற்பட்டால்தானே பரிகாரத்தை தேடி அலைய வேண்டிய அவசியம் உண்டாகிறது! விபரீதமே ஏற்படாதபடி முன்னெச்சரிக்கையாக இருந்துவிட்டால் பரிகாரத்திற்கு அவசியம் இல்லை அல்லவா!

இந்த நேரத்தில் இதைச் செய்தால் இது முடியும் என்று திட்டவட்டமாகத் தெரிந்தால் உடனே செய்துவிட வேண்டும். தாமதம் கூடாது; தாமதத்தால் பயன் போய்விடும்!

நெருப்பை அணைக்கும்போது முழுமையாக அணைக்க வேண்டும். மிச்சம்,

## உன்னத வாழ்வுக்கு

# வழிமுறைகளைப் பின்பற்றிச் செயல்முறை

சொச்சம் என்று விட்டுவைத்துவிடக் கூடாது. அப்படிச் செய்தால் எச்சமாக உள்ள தீயால் விபத்து ஏற்படக் கூடும். அதேபோல் பகைவரை அல்லது பகைச் சக்தியை விட்டுவைக்கக் கூடாது. அவ்வாறே தொழிலையும் அரைகுறையாக விடக் கூடாது.

இவை மூன்றும் முழுமையாகச் செய்யப்பட வேண்டியவை.

இந்தத் தத்துவத்தை நான் சொல்கிறேன் என்றால், குறள்வழியாகச் சொல்கிறேன்! குறளின் குரலே இது!

## ஐந்து முக்கிய அம்சங்கள்

ஒரு காரியத்தைச் செய்வதற்கு முன்னால் நாம் யோசித்துப் பார்க்க வேண்டியவை ஐந்து அம்சங்கள். அவை இவை:

பாலஜோசியர்

1. பொருள்
2. கருவி (சாதனம்)
3. காலம் (பருவம்)
4. வினை (காரியம்)
5. இடம்

மேற்கண்ட ஐந்தையும் பற்றித் தெளிவாக ஒரு முடிவுக்கு வர வேண்டும். ஆராய்ச்சியால் தெளிவு வரும்; தெளிவு வந்தபின்பு செயற்பட்டால் வெற்றி நிச்சயம்.

எப்படிப்பட்ட முயற்சி செய்ய வேண்டும்? என்பதையும் இடையில என்னென்ன இடையூறுகள் வரக்கூடும் என்பதையும், அந்த இடையூறுகளை எப்படிச் சமாளிப்பது என்பதையும், இறுதியில் கிடைக்கக்கூடிய பலன் என்ன என்பதையும் சீர்தூக்கிப் பார்த்துக் காரியத்தில் இறங்க வேண்டும்.

நாம் எல்லாமே தெரிந்த மேதைகளாக இருப்பதற்கு இல்லை. ஒவ்வொரு துறையிலும் நிபுணராக இருப்போர் உண்டு. அப்பேர்ப்பட்ட நிபுணரை அழைத்து, அவர்களின் கருத்தை அறிந்து, தெளிவு பெற்றுக் குறிப்பிட்ட பணியில் ஈடுபட்டால் வெற்றி உண்டாகும்.

புத்திசாலிகள் ஒரு காரியத்தால் மற்றொரு காரியத்தை முடித்துக் கொள்வார்கள். ஒரு யானையின் மூலம் மற்றொரு யானையைக் கட்டுவது போன்ற திறமை அது.

## பகைவர்களை நண்பராக்குங்கள்

நண்பர்கள் முக்கியமானவர்கள். அவர்களுக்கு நாம் நன்மை செய்வது அவசியமும் கூட. அது முக்கியமானதே ஆகும். ஆனால் அதைவிட மிகவும் முக்கியமானது, பகைவர்களை விரைந்து நட்பினராக்கிக் கொள்வது. பகைவரால் அழிவு ஏற்படக் கூடும்! ஆதலால் விரைவில் அவர்களை நட்பினராக்கிக் கொள்ள வேண்டும் என்கிறது குறள்.

நண்பர்கள் பொறுத்திருப்பார்கள்; பகைவர்கள் பொறுத்திருக்க மாட்டார்கள் அல்லவா! ஆதலால் முதலில் பகைவரை சரிசெய்து விட்டுப் பிறகு நண்பர்களின் பக்கம் வரலாம் என்று கூறப்படுகிறது.

எல்லாமே அற்புதமான வழிமுறைகள்! வழிமுறைகளைப் பின்பற்றிச் செயல் முறைகளில் ஈடுபட்டால் வினையின் ஆர்ப்பரிப்பு அடங்கத் தடையிராது.

# ஜோதிடப் பாடங்கள்

## உபநயனம் : ஆன்மிக உணர்வை ஊட்டுவிக்கும் அரிய சடங்கு

புனித நூல் (பூணூல்) அணிவிக்கும் விழா.

ஆன்மிக உணர்வைச் சிறுவர்களின் உள்ளத்தில் ஊட்டுவிக்கின்ற சடங்கு இது.

பெரியோர்கள், 'பிரும்மோபதேசம்' என்ற வகையில் இதே சாரத்தை காதுகளில் செலுத்துவார்கள்.

அற்புதமான, அபூர்வமான சடங்கு இது.

அறிவுக் கண்ணைத் திறந்து வைக்கும் விழா என்றும் இதை வருணிக்கலாம்.

5 அல்லது 8-வது வயதில் இந்த விழா நடத்தப்பட வேண்டும்.

முடியாத பட்சத்தில் 16 வயதுக்குள் செய்வதால் குற்றமில்லை.

உத்தராயண காலத்தில் இந்த விழா நடத்தப்பட வேண்டும்.

அதாவது சூரியன் மகரப் பிரவேசம் செய்து மிதுனம் முடியச் சஞ்சரிக்கும் காலம் இதற்கு ஏற்றது.

மாசி, பங்குனி, சித்திரை, வைகாசி ஆகிய இந்த நான்கு மாதங்கள் சிறப்பானவை.

சுக்லபட்சத்தில் துவிதியை, திருதியை, பஞ்சமி, சப்தமி, தசமி, திரயோதசி ஆகிய திதிகள் உன்னதமானவை.



## பாலஜோசியர்

கிருஷ்ண பட்சத்தில் பிரதமை, துவி
தியை, திரிதியை ஆகிய திதிகளும்
சிலாக்கியமானவை என்பதுண்டு.

சதுர்த்தி, அஷ்டமி, நவமி, ஏகாதசி,
துவாதசி, சதுர்த்தசி, பௌர்ணமி,
அமாவாசை ஆகிய திதிகள் ஒதுக்கப்பட
வேண்டியவை.

பையனுக்கு அதிகமாக வயதாகி
விடும் பட்சத்தில் சதுர்த்தசியில் கூட
உபநயனம் நடத்தலாம் என்பதற்குச்
சாஸ்திர சம்மதம் இருக்கிறது.

திங்கள், புதன், வியாழன், வெள்ளி
ஆகியவை விசேடமான கிழமைகள்.

புதன் அஸ்தங்கதமடைந்த நாளா
னல், புதன் கிழமை தவிர்க்கப்பட
வேண்டும்.

ஞாயிற்றுக்கிழமையைப் பரவாயில்லை
என்ற வகையில் சேர்த்துக் கொள்ளலாம்.

அசுவனி, ரோகிணி, மிருகசீரிஷம்,
புனர்பூசம், பூசம், உத்திரம், ஹஸ்தம்,
சித்திரை, சுவாதி, அனுஷம், உத்ரா
டம், திருவோணம், அவிட்டம், சதயம்,
உத்ரட்டாதி, ரேவதி ஆகியவை விசேட
மான நட்சத்திரங்கள் ஆகும்.

மேஷம், ரிஷபம், மிதுனம், கடகம்,
கன்னி, துலாம், கும்பம் ஆகிய லக்னங்
கள் சிறந்தவை.

சில முனிவர்கள், சித்திரை-வைகாசி
மாதங்களில் சுக்ல பட்சத் திரிதியை
திதியையும், மாசி, பங்குனி மாதங்களில்
சுக்ல பட்ச சப்தமி திதியையும் உப
நயனத்திற்கு மிகவும் உன்னதமானவை
என்று குறிப்பிட்டிருக்கிறார்கள்.

லக்னம் பார்க்கும்போது- 8-ம்
இடம் சுத்தியாக உள்ளதா என்பதைக்
கவனிக்க வேண்டும்.

முக்கியமாக லக்னத்திலிருந்து 6, 8,
12-ல் சந்திரன் இருப்பது கூடாது.

கேந்திரங்களில் பாபக் கிரகங்கள்
இருப்பது சரியாகாது.

முற்பகலில் முகூர்த்தம் அமைக்கப்பட
வேண்டும்.

6-ம் வீட்டில் சுபக்கிரகங்கள் மறைவு
பெற்று இருப்பது கூடாது. 5-ல் சனி,
செவ்வாய் கூடாது. 2-லும் கூடாது.

லக்னத்தில் சந்திரன் இருக்கக் கூடாது.

கடக லக்னமாகி, லக்னத்தில் சந்
திரன், குரு இருவரும் இருந்தால் சந்
திரன் லக்னத்தில் இருப்பதால் ஏற்படு
கிற குறை அகன்று விடும்.

சூரியனது கேந்திர இருப்பு கூடாது.

செவ்வாய் கேந்திரத்தில் இருந்தால்
நல்லதில்லை.

சனி—கேந்திரத்தில் இருந்தால் நோய்
வாய்ப்பட நேரும்.

ராகு கேந்திரத்தில் இருந்தால் —
தாயாருக்கு நோய் உண்டாகும்.

கேதுவின் கேந்திர இருப்பு உபநயனப்
பையனுக்கே நோய் உண்டாக்கும்.

இந்த விவரங்களையெல்லாம் கவனிக்க
வேண்டும்.

பொதுவாக எல்லா விசேடங்களுக்
கும் லக்னம் பார்க்கும் போது நிஷ்பஞ்
சக முகூர்த்தம் முக்கியம் என்பதை
முன்னமேயே சொல்லியிருக்கிறேன். இது
கவனத்தில் இருக்கவேண்டியதாகும்.

# நாள் எப்படி

ரௌத்ர வருஷம் ஆடிமாதம் 22-ம் தேதி முதல் ஆவணி மாதம் 5-ம் தேதி வரை - (6-8-1980 முதல் 20-8-1980 வரை). பொதுவாக எல்லாருக்கும் 'நாள் எப்படி?' என்ற விவரமும் உத்தேசமாகத் திதி வார நட்சத்திரக் கால அளவும் கீழே தரப்பட்டுள்ளன.

## ஆகஸ்டு 1980

**6. புதன்**

ஏகாதசி: இரவு 12-15 மணிவரை. பிறகு துவாதசி. ரோகிணி: காலை 7-15 மணிவரை. பிறகு மிருகசீரிஷம். சித்தயோகம். பொதுவாக நற்பணிகளில் ஈடுபடலாம். கல்வி, கல்வித்துறைகளில் பிரவேசிக்கலாம். அதிகாரிகள் சந்திப்பு, கணக்கு ஆரம்பித்தல், தொழிலை அபிவிருத்தி செய்தல் இவற்றிற்கெல்லாம் நல்ல நாளாகும் இது.

**7. வியாழன்**

துவாதசி: இரவு 11-45 மணிவரை; பிறகு திரயோதசி. மிருகசீரிஷம் காலை 7-15 மணிவரை. பிறகு திருவாதிரை. யோகம் சரியில்லை. மாமூல் வேலைகளை மட்டுமே செய்து வருவது நல்லது. நூதன காரியங்களில் ஈடுபடுவது, பயணம் தொடங்குவது ஆகியவற்றை ஒத்திப் போடுங்கள்.

**8. வெள்ளி**

திரயோதசி: இரவு 11-30 மணிவரை. பின்னர் சதுர்த்தசி. திருவாதிரை: காலை 7-30 மணிவரை. பிறகு புனர்பூசம். யோகம் நன்றாக உள்ளது. நூதன பணிகளில் ஈடுபடலாம். அதிகாரிகளைச் சந்திக்கலாம். கலை சம்பந்தப்பட்டவை பரிணமிக்கும். ஆண்-பெண் உறவுக்கு உகந்த தினமாகும்.

**9. சனி**

சதுர்த்தசி: இரவு 11-45 மணிவரை. பின்னர் அமாவாசை. புனர்பூசம்: காலை 8-15 மணிவரை. பிறகு பூசம். சித்தயோகம். மாமூல் வேலைகளில் ஈடுபடலாம். பொதுவாக எல்லாக் காரியங்களிலுமே அக்கறை செலுத்தினுல் ஆதாயம் கிடைக்கும். கணிதம், நிர்வாகம் ஆகியவற்றில் தொடர்பு கொள்ளலாம். நாட்டியம், வாத்தியம் இவற்றை மேற்கொள்ளலாம்.

**10. ஞாயிறு**

அமாவாசை: இரவு 12-45 மணிவரை. பிறகு பிரதமை. பூசம்: காலை 9-15 மணிவரை. பிறகு ஆயில்யம். சித்தயோகம். பெரியோர்களைச் சந்திக்கலாம். தெய்வ காரியங்களுக்கு ஏற்புடைய நாளாகும். உறவினர்களைத் தொடர்பு கொள்ளலாம். தொழில் திட்டங்களைப் பற்றி விவாதிக்கலாம்.

**11. திங்கள்**

பிரதமை: மறுநாள் காலை 2-00 மணிவரை. பிறகு துவிதியை. ஆயில்யம்: காலை 11-00 மணி வரை; பிறகு மகம். ஆயில்யம் உள்ள வரையில் யோகம் சிலாக்கியமாக இருக்கிறது. மாமூல் பணிகளை மட்டுமே செய்திடுவது நல்லது. பயணத்தைத் தவிர்க்கவும்.

**12. செவ்வாய்**

துவிதியை: மறு நாள் காலை 3-45 மணி வரை. பிறகு திரிதியை. மகம்: பிற்பகல் 1-00 மணி வரை. பிறகு பூரம். சித்தயோகம். அதிகாரிகளோடு தொடர்பு கொள்ளலாம். பொறியியல் பணிகளை ஆரம்பிக்கலாம். விவசாயப் பணிகளில் ஈடுபடலாம்.

**13. புதன்**

திரிதியை: மறுநாள் காலை 5-45 மணிவரை. பூரம்: பிற்பகல் 3-30 மணிவரை. பிறகு உத்திரம். அமிர்த யோகம். பிற்பகலில் நூதனப் பணிகளில் ஈடுபடலாம். பெரியோர்கள் சந்திப்பு, அதிகாரிகள் தொடர்பு இவற்றிற்கும் நல்லது.

**14. வியாழன்**

சதுர்த்தி: நாள் பூராவும். உத்திரம்: மாலை 6-15 மணிவரை. பிறகு ஹஸ்தம். ஹஸ்தம் வந்த பிறகு யோகம் நன்றாக உள்ளது. இரவில் நண்பர்களைச் சந்திக்கலாம். புதிய பணிகளுக்கான திட்டங்களைத் தீட்டலாம். விருந்து, கேளிக்கைகளில் ஈடுபாடு கொள்ளலாம்.

**15. வெள்ளி**

சதுர்த்தி: காலை 8-00 மணி வரை. பிறகு பஞ்சமி. ஹஸ்தம்: இரவு 9-15 மணி வரை. பிறகு சித்திரை. யோகம் நன்றாக இருக்கிறது. இது ஒரு நல்ல நாள். நற்பணிகளுக்கு முக்கியத்துவம் கொடுக்கலாம். கலைத்துறைகளில் ஈடு படலாம்; ஆண்-பெண் தொடர்புக்கும் உகந்த நாளாகும்.

**16. சனி**

பஞ்சமி: முற்பகல் 10-30 மணி வரை; பிறகு சஷ்டி; சித்திரை: இரவு 12-15 மணி வரை. பிறகு: சுவாதி. யோகம் சரியில்லை. மாமூல் பணிகளை மட்டுமே செய்து வருவது நல்லதாகும்.

**17. ஞாயிறு**

சஷ்டி: பகல் 1-00 மணி வரை. பிறகு: சப்தமி. சுவாதி: மறு நாள் காலை 3-00 மணிவரை. பிறகு விசாகம். சுவாதியுள்ள நேரமெல்லாம் யோகம் நன்றாக இருக் கிறது. விவசாயம், பொறியியல் ஆகிய துறைகளில் ஈடுபாடு கொள்ளலாம். அதிகாரிகள் சந்திப்பு, பெரியோர்களி டம் ஆலோசனை பெறுதல் ஆகியவை நலம் பயக்கும்.

**18. திங்கள்**

சப்தமி: பிற்பகல் 3-00 மணி வரை: பிறகு அஷ்டமி. விசாகம்: மறு நாள் காலை 5-30 மணிவரை. யோகம் சரி யில்லை. மாமூல் வேலைகளை மட்டுமே கவனியுங்கள்.

**19. செவ்வாய்**

அஷ்டமி: மாலை 4-45 மணி வரை. பிறகு நவமி. அனுஷம்: நாள் முழுவதும் யோகம் நன்றாக உள்ளது. பகலில் திதி அஷ்டமியாதலால் எந்த நூதன காரி யத்தையும் தொடங்க வேண்டாம். நவமி வந்தபிறகு ஓரளவு சிலாக்கியமாக இருக்கும். நண்பர்களைச் சந்திக்கலாம்; புதிய பணிகளுக்கான திட்டங்களை உரு வாக்கலாம்.

**20. புதன்**

நவமி: மாலை 5-45 மணிவரை. பிறகு தசமி. அனுஷம். காலை 7-30 மணி வரை. பிறகு கேட்டை. அமிர்தயோகம் முதலில். பிறகு சித்த யோகம். திதியும் நட்சத்திரமும் லௌகிக சுபகாரியங் களுக்குப் போதுமான அளவு சிலாக்கிய மாக எடுக்கப்படவில்லை. ஆதலால் மாமூல் பணிகளைமட்டுமே கவனியுங்கள்.

# விளையாட்டு விநோதம்

ஏழு அளவுத் துண்டுகளால் இந்த உருவத்தை அமையுங்கள்.




சென்ற இதழில் வெளியான உருவத்தை அமைக்கும் விதம்.

திரை கடல் ஓடியும் திரவியம் தேடி வைப்பார் தந்தை. செல்வம் எல்லாம் அவருக்கு மட்டுமா? இல்லை. தன் பிள்ளைகளுக்காக — பிள்ளைகளின் வளமான — நலமான வாழ்வுக்காக. இப்படிஇருந்தும் தந்தையின் நேரடி வாரிசான பிள்ளைகள், காலப்போக்கில் தந்தையின் சொத்து, சுகங்களை அனுபவிக்க முடியாமல் போய் விடுவது உண்டல்லவா!

ஜாதக ரீதியாகப் பார்க்கும்போது லக்னத்திற்கு ஒன்பதாம் இடம் தந்தை ஸ்தானம். ஐந்தாம் இடம் பூர்வ புண்ணியஸ்தானம். தந்தை ஸ்தானாதிபதியுடன், தந்தை காரகர் ஆன சூரியரும், தனம், பொருள் காரகர்

பாடலில், குருவுக்கு ஆறு, எட்டு, பன்னி ரண்டில் சந்திரன் இருப்பின் 'சகடை யோகம்' என்கிறார். இந்த யோகம் அமைந்த ஜாதகருக்கும் தந்தை சொத்து நிலைப்பது அரிது.

'ஒன்பதில் இரவிபுந்தி உணர்வொடு கூடிநிற்க
துன்பமாம் பிதுரின் பூமி தொடர்ச்சி ஒன்றில்லை'

—என்று இன்னொரு ஜோதிட நூல் ஆசிரியர் உரைக்கிறார். ஒன்பதாம் ஸ்தானத்தில் சூரியன், புதன் கூடிநிற்க தந்தையின் சொத்துக்கள் யாவும் தொடர்ச்சியாய் அழிந்து போவதோடு தந்தை இருந்த இன்பமாம் தலத்தை விட்டே மூன்றிடங்கள் மாற்றி வைக்கு மாம்.

# தந்தை சொத்து நிலைக்குமா?

ஆன குருவும் அமைந்து இருக்கும் நிலையை வைத்தும் ஆராய வேண்டும்.

ஐந்தாம் பாவத்தையும் இங்கு வலியுறுத்தப்படும் காரணம், எந்த நல்லதொரு யோக பாவத்தையும் பரிபூர்ணமாய் அடைவதற்கு, ஐந்தாம் பாவம் வலுப்பெற வேண்டும் என்பதுதான். என்னதான் ஒன்பதுக்கு உடையவர் பலம் பெற்றபோதிலும், பூர்வீகம் புண்யாதிபதியும் பலம்பெற்று இருந்தால் தான் தந்தை சொத்து, பூரணமாய் நிலைக்கும்.

அடுத்து, இரண்டு — நான்கிற்கு உடைய ஸ்தானாதிபதிகள் பலம் பெற்று இருக்கும் சாரநிலை, நடக்கும் தசா நாதன், நடக்கப்போகும் தசாநாதனின் யோக பாவங்களையும் உற்று நோக்கல் வேண்டும்.

'கண்ட பன்னிரண்டாம் இடக் காவலன்'' — என்று தொடங்கும் ஜாதக அலங்காரப் பாடலில், பன்னிரண்டாம் அதிபதி லக்னத்தில் அல்லது ஏழில் குடிகொண்டால் பூர்வீகந்தொட்டு தந்தை வரை கிடைத்தச் சொத்துக்கள் நிலைக்காது என்று கூறப்பட்டுள்ளது.

இந்நூலாசிரியரே பிறிதோரிடத்தில், 'அகடின் மன்னனுக்கு ஆறு எட்டுப் பன்னிரண்டில்' என்று தொடங்கும்

அப்படி என்றால் தனுசு லக்கினத் திற்குச் சூரியர் புதன் இவர்கள் கூடி இருப்பின் தர்மகர்மாதிபதி யோகம் ஆயிற்றே. தந்தை சொத்து அழிய வாய்ப்பு உண்டா? என்ற ஐயம் எழ இடம் உண்டு.

பொதுவாகவே தனுசு லக்ன அன்பர்களுக்குத் தந்தை தேடி வைத்த சொத்து சுகங்களை நீண்ட காலம் அனுபவிக்கும் யோகம் மிகக் குறைவே. இந்த லக்கினத்திற்குப் புதன் மறைவு பெற்று, மேடம், சிம்மத்தில் சூரியன் அமராமல்,புதனை ஏழாம் பார்வையாகப் பார்த்தால் நிச்சயம் தர்மகர்மாதிபதி யோகம் பெற்று, தந்தை சொத்து நிலைக்கக் காரணமாகிறது.

மற்ற லக்கினக்காரர்களுக்கு, விளையும் புதனும் சூரியனும் விரும்பி ஒன்று நான்கு ஏழில் அமர்ந்தால் வளையாத மன்னவன் ஆவது உண்மை.

தந்தை சொத்து நிலை அறிய ஒன்பதாம் ஸ்தானாதிபதி வலுவறிய வேண்டும். இடபம், சிம்மம், விருச்சிகம், கும்பம் இந்நான்கு ராசிகளுக்கு 'ஸ்திர ராசிகள்' என்று பெயர். இந் நான்கில் ஒன்றை லக்கினமாகக் கொண்டவர்களுக்கு ஒன்பதாம் வீட்டு அதிபதியே வாதகாதிபதி ஆகிறார்.

இடபம் இலக்கினக்காரர்களுக்கு ஒன்பது பத்துக்கு உடைய சனிபகவான் தர்மகர்மாதிபதி ஆகிறார். எனவே தர்ம கர்மாதிபதி ஆதிபத்தியம் பெற்ற சனி பகவானுக்கு வாதகாதிபத்திய தோஷம் இல்லை என்கிறார் 'சந்திர காவிய' நூல் ஆசிரியர்.

இருந்தபோதிலும் சிம்மம், விருச்சிகம், கும்பம் இம் மூன்று லக்கினக் காரர்களைப் போல், ரிஷபம் லக்கினக் காரர்களுக்கும் தந்தை சொத்து அப்படி ஒன்றும் பிரகாசமாய் நிலைப்பது இல்லை.

மேடம், கடகம், துலாம், மகரம் இந்நான்கு இராசிகளுக்கு 'சரராசிகள்' என்று பெயர். ஐந்து, ஒன்பது வலுப் பெற்றால் தந்தை சொத்து, பாக்கியம் நிலைக்கிறது. ஜன்ம லக்கினத்திற்கு ஐந்தாம் வீடும், சந்திர லக்கினத்திற்கு ஐந்தாம் வீடும் சர ராசியானால், தந்தை சொத்து நிலைப்பதுடன், தந்தையைக் காட்டிலும் பரிபூர்ண ஐஸ்வரியம் கிட்டும் என 'சாதக சிந்தாமணி நூல்' ஆசிரியர் உரைப்பது நடைமுறையில் பலன் அளிக்கிறது.

ஐந்துக்கு உடையவர் நீசமாக இவரை, மற்றொரு நீசமான கிரகம் பார்த்து ஒன்பதுக்கு உடையவர் களத்திராதி பதியுடன் கூடியிருக்க, அல்லது சாரம் பெற்று வலுத்து இருந்தால் தந்தையின் சொத்துகளை மனைவிக்கு எழுதி வைத்தால் நிலைக்கும்.

ஒன்பதுக்கு உடையவர் பத்தில் அமர, பத்துக்கு உடையவர் லாபாதிபதி யுடன் கூடி நிற்க, இரண்டு நான்கிற்கு உடையவர் பரிவர்த்தனைப் பெற்று வலுத்து இருந்தால், தனக்குக் கிடைத்த தந்தையின் சொத்தை விருத்தி ஆக்கித் தன் பிள்ளைகளுக்கும் விட்டுச் செல்வர்.

தர்மகர்மாதிபதி யோகம் பெற்ற ஜாதகருக்கு, இரு கிரகங்கள் உச்சம் அல்லது ஆட்சி பெற, வளர்பிறைச் சந்திரன், சுபஸ்தானத்தில் லக்கினாதி பதியுடன் கூடிநிற்க, தந்தை சொத்துப் புகழுடன் நிலைக்கும்.

ஐந்து ஒன்பதுக்கு உடையவர் பரிவர்த்தனைப் பெற்று, சுபக்கிரகங்கள் நோக்கப் பெற்றாலும், ஜீவனாதிபதி லாபாதிபதியுடன் பலம் பெற்றாலும் மூன்றுக் கிரகங்கள் வர்க்கோத்தமம் பெற்றாலும் தந்தை சொத்துப் பல அறச்சாலைகளுக்கு போகும். சொத்து அழியாது, நிலைக்கும்.

—புலவர் ச. ந. சண்முகவேல்

---

# வாகன யோகம்

வாகன யோகம் ஏற்பட பல விதமான கிரக நிலைகள்கூறப்பட்டுள்ளன. அவற்றில் சிலவற்றைக் காண்போம்.

சந்திரனுக்கு 3, 7, 11-மிடங்களில் சுக்ரன் இருந்தால்; 4-க்குடையோன் லாபஸ்தானத்தில் அமர்ந்து குருவினால் பார்க்கப் பட்டால்; குருவினால் பார்க்கப் பட்ட சுகாதிபதி தன் இல்லத்தைப் பார்த்தால்; 4-க்குடையோன், குரு, சுக்ரன், இவர்களுடன் சேர்ந்து கேந்திரத்திலோ, கோணத்திலோ (அல்லது) லாபஸ்தானத்திலோ இருந்தால்; 9-க்குடையோன், குரு, சுக்ரன், இவர்களுடன் சேர்ந்து 4 அல்லது 9-மிடத்தில் இருந்தால்; 9,10, 11-க்குடையோர் கூடி 4-ல் இருந்தால்; 10-மிடத்தில் ஓர் உச்சகிரகமிருந்து, லக்னாதிபதி பாக்யாதிபதி இவர்களால் பார்க்கப்பட்டால்; 4-க்குடையோன் குருவுடனே அல்லது சுக்ரனோடு சேர்ந்து லக்னத்தில் இருந்தால்; 4, 9-க்குடையோன் சேர்ந்து லக்ன கேந்திரம் பெற்றால்; சுகஸ்தானாதிபதியும், ஜீவனஸ்தானாதிபதியும் சேர்ந்து தனஸ்தானம் பெற்றால்; சுக்ரன் 4-க்குடையோனாகி 9,10,11-மிடங்களில் இருந்தால்; 1, 4, அல்லது 1, 10 அல்லது, 4, 5, அல்லது 5, 11-ஆம் வீட்டுக்குடையோரிடையே பரிவர்த்தனை ஏற்பட்டால் வாகன யோகம் ஏற்படும்.

மேற்படி யோகத்தை அளிக்கக் கூடிய கிரகங்களின் தசா, புக்தி களில் வாகன யோகம் ஏற்படும்.

—எம். எஸ். சந்திரசேகர்.



**ஆர். வி, உடுமலை.**

கேள்வி: கடக லக்னம். 2-ல் செவ்வாய்; 3-ல் புதன், சூரியன்; 4-ல் சுக்ரன்; 5-ல் குரு; 6-ல் ராகு: 8-ல் சனி, சந்திரன்; 12-ல் கேது. நடப்பு புதன் தசை சுக்ரபுக்தி. கடக லக்னத்திற்கு புதன் நல்லவரா? 3-ம் வீட்டில் சூரியனுடன் புதன் சேர்ந்திருந்து புதன் தசை நடப்பு எப்படி இருக்கும்? அஸ்தங்கதமா? அஷ்டம சனியினுல் கெடுதல் விளையுமா?

பதில்: கடக லக்னத்திற்கு புதனும் மகர லக்னத்திற்கு வியாழனும் 3, 12-ம் வீடுகளுக்கு உரியவர்களாவார்கள். பொதுவாக இவர்கள் நல்லவர்கள் அல்லர். ஆனுலும் ஒரு சில கிரந்தங்களில் இவர்கள் மூலம் நலம் விளையுமென அறிவிக்கப்பட்டுள்ளது. சூரியனுடன் புதன் நெருங்கியிருந்தால் அஸ்தங்கதம்தான்! சந்தேகத்திற்கு இடமில்லை. புதன் சொந்த, உச்ச வீடான கன்னியில் இருப்பதால் சில நன்மைகளையும் தனது தசையில் தரக் கடமைப்பட்டவராவார். லக்னத்திலிருந்து அஷ்டமத்தில் உள்ள சனி, அஷ்டமாதிபதியாகி அதே வீட்டில் இருப்பது விசேடமானது. 7-ம் வீட்டு மாரக ஆதிபத்யம் இருப்பதால்தான் கெடுதல் விளைவிக்க அவருக்கு அதிகாரமுண்டு.

**எஸ். ராஜாராம், சென்னை-52:**

கேள்வி: கன்யா லக்னம். 3-ல் சனி, ராகு; 5-ல் செவ்வாய்; 8-ல் சூரியன்; 9-ல் புதன், கேது; 10-ல் சுக்ரன், சந்திரன்; 12-ல் குரு. தற்போது குரு தசையில் கேது புக்தி நடப்பு. உத்தியோகம் தொடருமா? அல்லது உத்தியோக மாற்றம் ஏற்படுமா? திருமணப்பிராப்தி அண்மையில் நடக்க வாய்ப்புண்டா?

பதில்: தற்போது நேரம் அனுகூலமாக இல்லை. குருதசை சுக்ர புக்தியில் உத்தியோக விஷயத்தில் திருப்திகரமான சூழ்நிலை ஏற்படும். அதுவரை இடையூறு — சிக்கல் ஆகியவை ஏற்பட்டு வரும். குருப்பெயர்ச்சிக்குப் பிறகு நிலைமையில் அபிவிருத்தி உண்டாகும். சந்திர கேந்திரத்தில் உள்ள சுக்ரன் தனது புக்தியில் ஜாதகருக்குத் திருமணம் செய்து வைப்பான். வியாழன் கன்னியில் சஞ்சரிக்கும் காலம் குறிப்பாக நலம் தரும்.

**எஸ். நாராயணன், சென்னை-15.**

கேள்வி: கும்ப லக்னம். லக்னத்தில் புதன், சூரியன், சுக்ரன்; 5-ல் ராகு, சனி, செவ்வாய்; 9-ல் குரு, சந்திரன்; 11-ல் கேது. தற்போது சனிதசையில் ராகு புக்தி நடப்பு. எனக்கு அடிக்கடி நெஞ்சுவலி வருகிறது. மனைவிக்கும் எனக்கும் அடிக்கடி சச்சரவு வருகிறது. பொருளாதார நிலையில் அபிவிருத்தியும் இல்லை. விடிவு உண்டா?

பதில்: சனி, நவாம்சத்தில் நீசம் பெற்றிருக்கிறுர். அதோடு 5-ம் வீட்டில் இரண்டு பாபிகளோடு கூடியிருக்கிறுர். வியாழனது பார்வை நல்லது. ஆனுலும் ராகு புக்தி முடியும்வரை நெஞ்சுவலி போன்ற உபத்திரவங்கள் இருந்து வரும். அதிகமாகத் துன்புறுத்தாது. ஏழரைச் சனி வருவதால் சிறுசிறு உபாதைகள் இருந்து கொண்டே வரும். சனி ஸ்தோத்திரத்தைப் படிப்பதும் தியானம் செய்வதும் அவசியம்.

மனைவிக்கும் உங்களுக்கும் சர்ச்சை வருவதற்குக் காரணம் ராகுவின் நிலைதான். சர்ப்ப சாந்தி செய்வது நல்லது. கும்ப லக்னத்தில் பிறந்த உங்களுக்கு 7-ம் வீட்டு அதிபன் சூரியன். அவனுடன் சுக்ரன் சேர்ந்திருக்கிறுர். குருவின் பார்வை இருப்பதால் தோஷம் விலகும். கவலை வேண்டாம். சனி தசை குருபுக்தியிலிருந்து பொருளாதார அபிவிருத்தி கொஞ்சங் கொஞ்சமாக ஏற்படும். புததசை நன்றாக இருக்கும்.

**ப. ர. பொன்னுசாமி, ஈரோடு.**

கேள்வி: விருச்சிக லக்னம். லக்னத்தில் சூரியன்; 2-ல் சுக்ரன், குரு, சனி; 4-ல் கேது; 5-ல் சந்திரன்; 8-ல் செவ்வாய்; 10-ல் ராகு; 12-ல் புதன். தற்போது சுக்ரதசையில் செவ்வாய் புக்தி நடப்பு. மனத்தில் வரித்த பெண் மனைவியாக வாய்ப்பாளா? திருமணம் எப்போது நடைபெறும்?



# பாலஜோசியர்

பதில்: சுக்ர தசையில் குருபுக்தியின் போது திருமணம் நடைபெறும். மனத்தில் வரித்த பெண் மனைவியாக வாய்ப்புண்டு. எட்டில் செவ்வாய் இருப்பதால் தோஷம் உண்டு. மனத்தில் வரித்த பெண்ணுக்கும் தோஷம் இருக்கிறதா என்று பாருங்கள். சம தோஷமாக இருக்க வேண்டும். மேலும் அந்தப் பெண் ஜாதகத்தில் எட்டாம் பாவம் பலமாக இருக்கிறதா என்பதையும் பார்க்க வேண்டும். இந்த இரு வகைகளிலும் திருப்தியாக இருக்குமானால், அந்த வாய்ப்பு சிறப்பாக அமையும்.

**வி. எம். பூஷணம், அழகியபாண்டியாபுரம்.**

கேள்வி: சிம்ம லக்னம். லக்னத்தில் குரு, சனி; 3-ல் சந்திரன், ராகு; 7-ல் புதன்; 8-ல் சூரியன், 9-ல் செவ்வாய், சுக்ரன், கேது. தற்போது கேது தசையில் சுக்ர புக்தி நடப்பு. முதுமையில் மனநிம்மதியோடு தள்ள முடியுமா?

பதில்: லக்னத்தில் குரு இருப்பதாலும், செவ்வாயும் சுக்ரனும் 9-ல் கூடியிருப்பதாலும் நீங்கள் உங்கள் முதுமைக் காலத்தை நிம்மதியாகத் தள்ள முடியும். சந்திரனுடன் ராகு சேர்ந்திருப்பதால் மனத்தில் அவ்வப்போது சலனங்கள் உண்டாவதைத் தவிர்க்க முடியாது.

**பி. பாலசுப்பிரமணியம், சித்தூர்.**

கேள்வி: துலா லக்னம். 5-ல் கேது, சுக்ரன்; 7-ல் சூரியன், புதன்; 8-ல் சனி, குரு; 9-ல் சந்திரன், செவ்வாய்; 11-ல், ராகு. தற்போது கேது தசையில் சூரிய புக்தி நடப்பு. நான் நிறைந்த பொருளும் புகழும் பெற வாய்ப்புண்டா? எந்தத் துறை மூலம் இதனை அடையலாம்?

பதில்: சந்திரனுடன் கூடிய செவ்வாய் 9-ம் இடத்தில் இருப்பதால் பொருளும் புகழும் பெற வாய்ப்புண்டு. தனகாரகன் 8-ல் இருப்பதால் அதிகம் பொருள் பெற இயலாது. லக்னேசன் கேதுவுடன் சேர்ந்திருப்பதால் புகழுக்கும் ஓர் அளவு ஏற்பட்டுவிடும். சமூகப் பணி செய்வதன் மூலமாகப் புகழையும், வியாபாரத்தின் மூலம் பொருளையும் பெறலாம். புதனது கேந்திரக் குடியிருப்பு நல்லது. சூரியனது சேர்க்கையால் பலம் குறைகிறது. அதனால் வியாபாரம் கூடி வரத் தடையுண்டு. தடையை அகற்றுவதற்கு உங்கள் குல தெய்வத்தைத் தினமும் பிரார்த்தனை செய்து, சிறிது நேரம் தியானம் செய்யுங்கள். பேச்சில் இனிமையையும் எளிமையையும் கலந்து நயமாகப் பேசுங்கள். உங்கள் எதிர்பார்ப்பு நிறைவேறும்.

**ஓர் அன்பர்**

கேள்வி: ரிஷப லக்னம். 2-ல் சூரியன், புதன், குரு, கேது; 4-ல் சுக்ரன்; 6-ல் சனி; சந்திரன், செவ்வாய், ராகு. தற்போது சந்திர தசையில் ராகுபுக்தி நடப்பு. கடந்த 7 வருடங்களாக அசாதாரணமான மனச் சஞ்சலத்தினால்



# பதில்

அவதியும், வாழ்க்கையில் சிக்கலும் தோன்றி வதைக்கிறது. இந்த வாதனை யிலிருந்து மீளுவது எப்போது? தூக்க மாத்திரையைத் துறந்து நிம்மதியாகத் தூங்குவது எப்போது?

பதில்: மனத்தின் காரகனை சந்திரனுடன் செவ்வாய், ராகு ஆகிய இரு பாபக் கிரகங்கள் பின்னிக் கொண்டிருக்கிறார்கள். இது உங்களின் மனச்சஞ்சலத்திற்கு ஜாதக அடிப்படையில் தெரிகிற ஒரு காரணம். இந்த வாதனையிலிருந்து மீளுவதற்கு உங்களின் மனஉறுதிப் பயிற்சி அவசியம். அதை அடைய முயலவேண்டும். 2-ம் வீட்டிலுள்ள கிரகங்களில் வியாழன் உங்களுக்குத் தெய்வ பலத்தையும், அதே இடத்தில் உள்ள புதன் அறிவு பலத்தையும் தருவார். இந்தச் சந்திர தசை குரு புக்தியிலிருந்து உங்களுக்கு நலம் விளைய ஆரம்பிக்கும். நிம்மதியாகத் தூங்கவும் முடியும்.

**கோமதி, சைதை.**

கேள்வி: கும்ப லக்னம். 3-ல் சூரியன், ராகு; 4-ல் சந்திரன், புதன்; 5-ல் சுக்ரன்; 6-ல் சனி; 7-ல் செவ்வாய்; 9-ல் கேது; 11-ல் குரு. தற்போது ராகு தசையில் சுக்ர புக்தி நடப்பு. வறுமை எப்பொழுது தீரும்? ரேசுக்குப் போகும் என் கணவர் எப்பொழுது திருந்துவார்? ஆஸ்துமா நோயாளி நான். இந்த வியாதி தீருமா? என் மாங்கல்ய பலம் எப்படி?

பதில்: உங்களின் ஜாதகம் சரியாக இருக்கும் பட்சத்தில் நீங்கள் தற்போது வறுமையிலிருந்து நிவாரணம் பெறவேண்டும். உங்கள் கணவரைக் குறிப்பிடும் கிரகங்களான சூரியனும் குருவும் பலத்தோடு இருப்பதால் அவரின் வாழ்க்கை நலம் மேன்மை யுறுவதற்கு வாய்ப்புண்டு. 7-ம் இடத்தில் உள்ள செவ்வாயும் 9-ம் வீட்டில் உள்ள கேதுவும் தோஷத்தை உண்டு பண்ணுகிறார்கள். வியாழ பார்வை 7-ம் வீட்டில் படுவதால் தோஷம் அகல இடமுண்டு. ரேஸுக்குப் போவதும் அதனால் இழப்பைச் சந்திப்பதும் காலக்கிரமத்தில் குறைந்துவிடும். உங்களின் நோய் அடியோடு அகலாவிட்டாலும் அதனால் உபத்திரவம் குறையும். மாங்கல்ய பாவம் கெட்டியாக இருக்கிறது. கவலை வேண்டாம்.

**என். சுந்தரம், குரோம்பேட்டை.**

கேள்வி: மிதுன லக்னம். லக்னத்தில் செவ்வாய்; 4-ல் ராகு; 6-ல் சந்திரன், குரு; 7-ல் சனி; 10-ல் புதன், கேது; 11-ல் சூரியன்; 12-ல் சுக்ரன். இது என் குமாரத்தி ஜாதகம். தற்போது சுக்ர தசை சூரிய புக்தி நடப்பு. திருமணப் பிராப்தி எப்பொழுது? திருமணத்திற்குப் பின் நல்ல நிலையில் இருப்பாளா?

பதில்: வியாழன் சந்திர லக்னத்திலிருந்து 11-ம் வீட்டில் வந்து, அங்கே சஞ்சாரம் செய்யும் காலத்தில் திருமணம் கூடிவரும். சந்திர புக்தி நடைபெறும் நேரமாக அது அமையும். 7-ல் சனியும், 6-ல் குருவும், 12-ல் சுக்ரனும் இருக்கிறார்கள். இதனால் தடை ஏற்பட மார்க்கமுண்டு. வியாழக்கிழமை விரதமிருக்கச் சொல்லுங்கள். குருஸ்தோத்திரம் பாராயணம் செய்யலாம். பிரகாசம் ஏற்படும். திருமணத்திற்குப் பின் ஓரளவுக்கு நல்ல நிலைமையுடனேயே இருப்பாள்.

**என். சுப்பாராவ், ஆவடி.**

கேள்வி: சிம்ம லக்னம். லக்னத்தில் ராகு; 3-ல் சனி; 4-ல் குரு; 7-ல் செவ்வாய், கேது; 9-ல் சந்திரன், 11-ல் சுக்ரன்; 12-ல் சூரியன், புதன். தற்போது ராகு தசையில் சுக்ரபுக்தி நடப்பு. தொல்லைகள் நீங்கி நிம்மதியாக வாழ்க்கை நடத்த வாய்ப்புண்டா? லக்னத்திற்கு 5-ம் வீட்டுக்காரருடைய தசையும் 11-ம் வீட்டுக்காரருடைய புக்தியோ அல்லது அந்தரமோ வந்தால் யோகம் உண்டு என்று ஒரு முறை பால ஜோதிடத்தில் எழுதப்பட்டிருந்தது. அப்படிப்பட்ட அமைப்பு எனக்கு 12 வருடத்திற்குப் பிறகுதான் வரும். அப்போது அது யோக காலமாக இருக்குமா? அதை அனுபவிக்க வாய்ப்பு உண்டா?

பதில்: தசாநாதனை ராகு லக்ன கேந்திரத்திலும், புக்திநாதன் அவனுக்கு 11-லும் இருப்பதாலும் தற்காலம் உங்களின் தொல்லைகள் குறைய இடமுண்டு. உங்களுக்கு 5-ம் வீட்டுக்குரிய குரு 4-ம் வீடான கேந்திரத்தில் இருக்கிறார். 11-ம் வீட்டுக்குரிய புதன் குருவுக்கு 9-ல் இருக்கிறார். இதனால் யோக பலன்கள் உண்டாகும். ஆனால் புதன் லக்னத்திலிருந்து 12-ல் இருப்பதால் அந்த நற்பலன்களின் அளவு சற்றுக் குறைவாகவே இருக்கும்.

**நெ. வே. பாபு, வந்தவாசி.**

கேள்வி: மகர லக்னம். லக்னத்தில் சுக்ரன், சூரியன், புதன்; 5-ல் குரு(வ) 6-ல் கேது; 7-ல் சந்திரன்; 10-ல் சனி, செவ்வாய்; 12-ல் ராகு. சுக்ர தசையில் சந்திர புக்தி நடப்பு. வடநாட்டில் பணியாற்றிக் கொண்டிருக்கும் எனக்குத் தமிழகத்தில் வேலை செய்யும் வாய்ப்பு கிட்டுமா? எப்போது? உடல் ஆரோக்கியம் எப்படி இருக்கும்?

பதில்: சுக்ர தசை முடிந்து சூரிய தசை ஆரம்பித்த பிறகு உங்கள் எண்ணம் பூரணமாக நிறைவேறும். இடையில் சுக்ரதசையில் சில காலம் தமிழகத்திற்கு வந்து இருக்கவும் வாய்ப்புண்டு. செவ்வாய் புக்தியிலேயே கூட அந்த வாய்ப்பு ஏற்பட வேண்டும். உடல் ஆரோக்கியம் பொதுவாகத் திருப்தியாக இருக்குமென்றாலும், சில நேரங்களில் உபாதைகளுக்கு ஆட்படக் கூடும்.

**வி. வரதராஜன், ஓமலூர்.**

கேள்வி: மீன லக்னம். லக்னத்தில் குரு; 4-ல் புதன், ராகு, சந்திரன்; 5-ல் சூரியன்; 6-ல் சுக்ரன், செவ்வாய்; 9-ல் சனி; 10-ல் கேது. தற்போது புதன் தசையில் ராகு புக்தி நடப்பு. தற்போது இரண்டாம் தார யோகம் உண்டாகுமா? அதனால் நன்மை ஏற்படுமா? அரசாங்கத்தில் முன்பு விட்டுப்போன தொழில் மீண்டும் முயற்சித்தால் கிடைக்குமா? ஜோதிடத்தில் புலமை பெற வாய்ப்புண்டா?

பதில்: தற்போது நீங்கள் எதிர்பார்க்கிற யோகம் உண்டாகக் காரணமில்லை. புததசை குரு புக்தியில் அப்படிப்பட்ட ஒரு சந்தர்ப்பம் உண்டாகலாம். புத தசை குருபுக்தி நல்ல நேரமாகும். ஆகையால் உங்களின் குடும்ப வாழ்வு நலம் பெறும். அரசாங்கத்தில் நீங்கள் எதிர்பார்க்கும் காரியம் குரு புக்தியில் கூடி வருவதற்கு இடமிருக்கிறது. லக்னத்தில் குருவும், புதனும் இருப்பதால் ஜோதிடத்தில் புலமைபெற முடியும்.

**எஸ். மகாலிங்கம், கீழ் அக்ரஹாரம்.**

கேள்வி: கன்யா லக்னம். லக்னத்தில் செவ்வாய்; 2-ல் ராகு; 3-ல் சுக்ரன், புதன், சூரியன், சந்திரன்; 6-ல் குரு; 7-ல் சனி(வ). 8-ல் கேது: 10-ல் மாந்தி. தற்போது கேது தசையில் புதன் புக்தி நடப்பு. இதுவரையில் திருமணம் நடக்கவில்லை. நடக்குமா? எப்போது? வருகின்ற சுக்ர தசையில் நற்பலன்களும் சௌகரியங்களும் எப்போது ஏற்பட இடமுண்டு?

பதில்: சந்திர கேந்திரம் பெற்ற சுக்ரன், லக்னத்திற்கு 2, 9-ம் வீடுகளுக்குரியவனாக இருப்பதால் சுக்ர தசையில் நற்பலன்களும் சௌகரியங்களும் ஏற்பட நியாயமுண்டு. சுக்ர தசை ஆரம்பமானதுமே மேற்சொன்ன பலன்கள் உண்டாக ஆரம்பித்து விடும். திருமணத்திற்குத் தடை உண்டாக்கும் கிரக வலிமை ஓங்கியிருக்கிறது. சுக்ர தசை தொடங்குவதாலும், சுக்ரனும் குருவும் லக்ன கேந்திரத்தில் இருப்பதாலும் சாந்தி, பரிகாரங்கள் சில வற்றைச் செய்து கொண்டால் தடை விலகவும், திருமணம் நடைபெறவும் வாய்ப்புண்டாகும்.

**சி. சிவராமன், இலங்கை.**

கேள்வி: விருச்சிக லக்னம். லக்னத்தில் சுக்ரன்; 2-ல் சூரியன், செவ்வாய், புதன், குரு; 6-ல் ராகு; 10-ல் சனி; 11-ல் சந்திரன்; 12-ல் கேது. தற்போது குரு தசையில் சனிபுக்தி நடப்பு. இது எனது சகோதரியின் ஜாதகம். இந்த ஜாதகிக்குத் திருமணம் எப்போது நடக்கும்? மணமகன் அரசாங்க உத்தியோகம் வகிப்பவராக இருப்பாரா?

பதில்: கன்யா ராசிக்கு வியாழன் பிரவேசம் செய்த பிறகு திருமணம் நடைபெறும். மணமகன் அரசாங்க உத்தியோகம் வகிப்பவராக இருக்கச் சந்தர்ப்பம் உண்டு. 7-ம் வீட்டோனுக்கு 10-ம் வீட்டோன் லக்னத்திலிருந்து 2-ல் இருப்பது ஒரு காரணம். 7-ம் வீட்டுக்குப் பத்தாம் வீட்டோனான சனியின் நிலைமையில் மணமகனுக்கு அரசாங்க வேலை கத்தரிப்பு ஏற்படவும் இடமுண்டு.

**டி. மனோகரன், ஓ எம். மங்கலம்.**

கேள்வி: தனுசு லக்னம். லக்னத்தில் ராகு, சுக்ரன்; 2-ல் சூரியன்; 3-ல் புதன்; 4-ல் செவ்வாய்; 7-ல் கேது, சந்திரன், குரு (வ); 11-ல் சனி. தற்போது குருதசையில் அங்காரக புக்தி நடப்பு. மணப்பெண் சொந்தத்திலா? அந்நியத்திலா? பட்டப்படிப்புப் பெற வாய்ப்புள்ளதா?

பதில்: மணப்பெண் சொந்தத்தில் அமைய இடமுண்டு. ஆனால் கேது தோஷத்தால் அதற்குத் தடையுண்

டாகும். சர்ப்பசாந்தி போன்ற பரிகாரங்கள் செய்யப்பட்டால் தடை விலக முடியும். வித்யாகாரகன் பல வீனப்பட்டிருப்பதால் பட்டப்படிப்புக்குக் குறுக்கீடு உண்டு. 4-ம் வீட்டுக் காரனை குரு - லக்னேசனுகி 7-ல் இருப்பதால் தாமதமாகப் பட்டப் படிப்பு அமையக்கூடும்.

**வெ. நாராயணன், தேனி.**

கேள்வி: மேஷ லக்னம். 2-ல் ராகு; 4-ல் சனி, செவ்வாய்; 7-ல் சுக்ரன், சூரியன், புதன்; 8-ல் குரு, கேது; 11-ல் சந்திரன். சூரியன், செவ்வாய். நீசபங்க ராஜ யோகம் உண்டா? 7-ல் சுக்ரன் சூரியன் சம்பந்தம் — பலன் என்ன? 4-ம் வீடு 11-ம் வீடு பரிவர்த்தனை — விசேடம் யாது?

பதில்: நீசபங்க ராஜயோகம் உண்டு. 7-ல் சுக்ர-சூரிய சம்பந்தத்தால் (அந்த சம்பந்தத்தில் ஏற்படும் நீசபங்க யோகத்தால்) குடும்ப நலம் சிறப்படையும். புண்ணிய வசத்தால் சிறந்த நற்பாக்கியம் ஏதேனும் வந்து சேரும். வாழ்க்கைத் துணை வழி நலம் ஏற்படும்.

4,11-க்குரியவர்களின் பரிவர்த்தனையால் சுகம், தனம் ஆகியவை கிடைக்கப் பெறுவது வழக்கம். ஒருவருக்கொருவர் 6-8-மாக இருப்பதால் ஒரு சில சிக்கல்களிலும் அகப்பட்டுக் கொள்ள நேரும்.

**எம். லட்சுமணன், வடபழனி.**

கேள்வி: ரிஷப லக்னம். லக்னத்தில் சுக்ரன், புதன்(வ), 2-ல் சூரியன், செவ்வாய், கேது; 3-ல் குரு; 6-ல் சனி(வ), 8-ல் ராகு, 12-ல் சந்திரன், மாந்தி. தற்போது சந்திர தசையில் கேது புக்தி நடப்பு. ஜவுளிக்கடையில் வேலை செய்கிறேன். முன்னேற்றம் இன்றி கஷ்டப்படுகிறேன். நடனம் கற்றிருக்கிறேன். கலைத்துறையில் முன்னேற்றம் ஏற்பட வாய்ப்புண்டா? வேறு எந்தத் தொழில் சிறப்பாக இருக்கும்?

பதில்: தசை பலமாக இல்லாத காரணத்தால் முன்னேற்றம் பாதிக்கப்பட்டு வருகிறது. சுக்ர பலம் இருப்பதால், கலைத்துறையில் முன்னேற வாய்ப்புண்டு. கலைத்துறைகளிலேயே முயலுங்கள். கூடிவரும். வேறு தொழில் என்று பார்த்தால் — கூட்டு வியாபாரம் உங்களுக்கு ஏற்றது.

**ஏ. பி. ஹரன், கல்கத்தா.**

கேள்வி: ரிஷப லக்னம். 3-ல் கேது; 4-ல் செவ்வாய்; 5-ல் சுக்ரன், சூரியன்; 6-ல் புதன், குரு; 7-ல் சந்திரன்; 9-ல் சனி, ராகு. தற்போது செவ்வாய் தசை நடைபெறுகிறது. பொருளாதார அபிவிருத்தி உண்டாகுமா? சொந்த வீடு கட்டி, குடிபோக வாய்ப்பு எப்போது ஏற்படும்?

பதில்: சனியின் இருப்பிடம் ஜாதகத்தில் வலுப்பெற்றுள்ளது. 9, 10-க்குரியவரான சனிபகவான் 9-லேயே இருப்பதால் எல்லாவித அபிவிருத்திகளும் ஏற்படும். இதர கிரகங்களின் பலம் சுமாராகவே இருப்பதால் நற்பலன்களின் அளவு, ஓரளவோடு இருக்கும். ராகு தசை சிறப்பாக இருக்கும். எண்ணங்கள் ஈடேறும்.

**கு. கீதா, மதுரை - 11.**

கேள்வி: கடக லக்னம். லக்னத்தில் சூரியன், புதன்; 2-ல் செவ்வாய், ராகு; 6-ல் சனி; 7-ல் குரு; 8-ல் கேது; 9-ல் சந்திரன்; 12-ல் சுக்ரன். நடப்பு புதன் தசையில் சந்திர புக்தி. கல்வித்துறையில் சிறப்பு பெறுவேனு? சனி, குரு பரிவர்த்தனையினுல் நற்பலன் விளையுமா?

பதில்: லக்னத்தில் 2-ம் வீட்டோன் வித்யாகாரகனுடன் இருப்பதால் கல்வித் துறையில் சிறப்பு ஏற்படும். நீசபங்கம் பெற்ற குருவின் பார்வையும் இவர்களுக்கு இருக்கிறது. சுக்ரன் 12-ல் இருப்பதாலும் 2-ல் செவ்வாய்-ராகு இருப்பதாலும் கல்வித் தடையும் உண்டு. சனி-குரு பரிவர்த்தனையால் விசேடமான நற்பலன்களை அடைய இயலாது. வேறு காரணங்களால் நற்பலன்கள் உங்களுக்கு ஏற்படும்.

**சாந்தா, மதுரை.**

கேள்வி: மகர லக்னம். 2-ல் புதன், சுக்ரன்; 3-ல் சூரியன்; 4-ல் கேது; 5-ல் செவ்வாய்; 8-ல் சந்திரன்; 9-ல் குரு; 10-ல் ராகு; 11-ல் சனி. சூரிய தசையில் புதன் புக்தி நடப்பு. வேலையில் உயர்வு கிடைக்குமா? திருமணம் எப்போது நடக்கும்?

பதில்: சூரிய தசையில் தற்போது புத புக்தி நடக்கிறது அல்லவா! குருப் பெயர்ச்சிக்குப் பிறகு வேலையில் ஓரளவு உயர்வு கிடைக்கும். ஏழரைச் சனி கடந்த பிறகு சிறப்பான உயர்வு சித்திக்கும். புதன் புக்திக்குள் திருமண பாக்கியம் கூடி வரும்.

# சந்திரனும் ரோகிணியும்..

விண்வெளியில் நட்சத்திரங்களின் நிலையைக் கொண்டும், சந்திரனின் நிலையைக் கொண்டும் வயது முதிர்ந்த பெரியோர்கள் இரவு காலங்களில் நேரத்தினைக் கணக்கிடுவார்கள். வானவீதி பன்னிரண்டு பாகங்களாக வகுக்கப்பட்டுள்ளது. அதைதான் ராசி, அல்லது வீடு என்று கூறுகிறோம். ஒவ்வொரு வீட்டிலும் கிரகங்கள் ஒவ்வொன்றும் குறிப்பிட்ட காலம் தங்கியிருக்கும். அவைகளின் சஞ்சார காலம் ஒரே அளவாக இருப்பதில்லை. சூரியன் நவக்கிரகங்களில் முதன்மையானவன் என்றிருந்தாலும் ஒவ்வொரு ராசி வீட்டிலும் அவன் காலம் ஒரு மாதமாகும். சூரியனுடைய புத்திரன் தான் சனி என்று கூறுவார்கள். ஒவ்வொரு ராசியிலும் இதன் காலம் இரண்டரையாண்டுகள் ஆகும். சந்திரனுடைய காலம் ஒரு ராசிக்கு இரண்டேகால் நாட்கள்தான். இரண்டேகால் நட்சத்திரங்களுக்கு ஒரு ராசியாக குறிப்பிட்டிருப்பதை நாம் அறிவோம். ஒவ்வொரு தினத்திலும் பஞ்சாங்கத்தில் அன்றைய நட்சத்திரம் குறிக்கப்பட்டிருக்கும். இரவு காலத்தில் வானத்தை நோக்கினுல் சந்திரன் அந்த நட்சத்திரத்தின் பிரதேசத்தில் காணப்படும்.

சந்திரனுக்கு நட்சத்திரங்கள் இருபத்தி ஏழும் மனைவிகளென்பது புராணக் கூற்று. அவர்களெல்லாரையும் சந்திரன் சமத்துவமாகப் பாராபட்சமின்றி நடத்த வேண்டுமென்பது அவருக்குக் கட்டளை. ஆனுல், சந்திரன் ரோகிணி நட்சத்திரத்தில் மாத்திரம் அதிகமான அன்பு காட்டினுன். அதற்கு அத்தாட்சியாக எப்போதும் வானத்தில் ரோகிணி நட்சத்திரத்தன்று சந்திரன் அதன் அருகில் இருப்பதைக் காணலாம். ஒவ்வொரு மாதத்திலும் வரும் ரோகிணி நட்சத்திரத்தன்று சந்திரன் அதன் அருகில் உள்ளதைக் கண்டு ரோகிணியை அறியலாம். அதன் வடிவம் ஏறக்குறைய ஐந்து நட்சத்திரம் கொண்ட ஒரு முக்கோண வடிவாக இருக்கும். சந்திரன் அருகிலேயே இது காணப்படும். அதன் மேலே மிருகசீரிஷம், தேங்காய் கண்போல் மூன்று நட்சத்திரச் சிறு வடிவமாகக் காணப்படும். மிருகசீரிஷம் என்ருல் மிருகத்தின் தலை என்று பொருள். இது மேனுட்டவருடைய வான சாஸ்திரப்படி 'ஒரியன்' நட்சத்திர கூட்டத்தின் தலைப் பாகமாகும். இவற்றையும் மேல் வானத்தில் தை, மாசி ஆகிய மாதங்களில் காணலாம்.

இவை ஒரு புறம் இருக்க, சந்திரனின் கதை என்னவென்று பார்ப்போம். சந்திரனுடைய பாரபட்சத்தைக் கேள்விபட்ட அவர் மாமனுர் தினமும் கொஞ்சம் கொஞ்சமாக அவனுடைய கலைகள் அழியக் கடவதென்று சபித்துவிட்டார். அதன் படியே பௌர்ணமி கழித்த மறுதினம் முதல், தினமும் சிறிது சிறிதாக அதன் வடிவம் குறைந்து வருவதை காணலாம். பதினைந்து கலைகளும் அழிந்துவிடக் கூடிய அபாயத்தை அறிந்த சந்திரன் மிகவும் அச்சமுற்று பரமசிவனை சரண் அடைந்தான். பரமசிவன், சந்திரன்பால் இரக்கம் கொண்டு கடைசியாக எஞ்சியுள்ள ஒரு கலையுடன் தன் முடியில் தாங்கி அபயமளித்தார். அதுமுதல், தினமும் ஒரு கலையாக சந்திரன் வளர ஆரம்பித்தான். இதை 'வளர்பிறை' என்கிறோம். இதை ஒட்டிதான் அமாவாசை தினத்தை ஆங்கிலேயர் New Moon என்றழைக்கிருர்கள். வளர்பிறை 15 நாட்களும் வளர்ந்து முழு உருவம் அடைந்ததைப் பௌர்ணமி என்கிறோம். அவர்கள் Full Moon என்கிருர்கள்.

வானியல் பயிற்சியில் நம்மவர்க்கு ஆர்வம் இல்லை. அதை போதிப்பவர்களும் இல்லை. இதை அறிந்த முதியோரிடத்தில் இதைப் பற்றித் தெரிந்து கொண்டால் ஒரு வழியில் பயனை அடையலாம். இதைப் போல் மற்றுமுள்ள புராணப்பொருத்தங்களையும்காணலாம்.

சூரியனுடைய புத்திரன் சனி என்று கூறப்பட்டது. அதுபோல் சந்திரன் (சோமன்) புத்திரன், புதன் (ஸௌம்யன்). இதுபற்றியே புதவாரத்திற்கு ஸௌம்ய வாரம் என்று பெயர். பூமியின் புத்திரன் செவ்வாய் (அங்காரகன்) பௌமவாரம் என்று இக் கிழமைக்குப் பெயர். இச் சிறப்பு பற்றி நம் பூமியில் உள்ளோர் சிலர் விவாகப் பொருத்தங்களில் அங்காரகப் பொருத்தம் பார்க்கவேண்டாம் என்று கூறுவர். தை, மாசி மாதங்களில்தான் வானத்தில் ரோகிணி நட்சத்திரத்தை எளிதில் காணக்கூடும்.

—எம். டி. ஸ்ரீராமன்

# அம்பிகை

**(சென்ற இதழ்த் தொடர்ச்சி)**

'அம்பிகை' என்ற சொல்லுக்கு 'அன்பு' என்று பொருள் கொள்ளலாம். ஏனெனில் அம்பா என்ருல் 'தாய்' என்று பெரியோர் கூறுவர். கெட்ட மனைவி, கெட்ட சகோதரி, கெட்ட பெண் இருக்கலாம். ஆனுல், கெட்ட தாய் என்று ஒருத்தி இருக்க முடியாது. அன்பின் அடிப்படையில் தாயுள்ளம் செயல்படுவதால் தாய்க்கும், தீமைக்கும் தொடர்பு இருக்க வழியில்லை.

'ஆண்-பெண்' என்று இருபாலராக மனித குலத்தைப் பாகுபடுத்தினுலும், ஒவ்வொரு பெண்ணின் உடலின் ஒரு பகுதியும், ஒவ்வொரு ஆணின் உடலின் ஒரு பகுதியும் எதிர் இனத்தை ஒட்டிய குணங்கள் உடையது என்று உடற்கூறு வல்லுனர்கள் ஒப்புக்கொள்வர். இவ்வுண்மையை பல நூற்ருண்டுகளுக்கு முன்பே நமது மதநூல்கள் கண்டுபிடித்துவிட்டன. ''ஹ்ரியா சரதி அங்கனுயா: பாகேன பருஷோபி ஸ:। ஸாபி பும்ஸாம் வஹேத் தார்ட்யம் இதி மானுஷ சிந்தனம்.''(வெகு கொடூரமானவன் கூட வெட்கமோ கூச்சமோ ஏற்படும்போது பெண் போல் சிரிக்கிருன், நெளிகிருன். பெண்ணும் உறுதியைக் கடைப் பிடிக்கையில் ஆண்போல — என்பது மனிதரைப் பற்றிய சிந்தனை என்று புராணம் கூறுகிறது — புராணம் அமைத்த சொற்களின் மொழிபெயர்ப்பு இது. அமைப்பு சரியாகத் தோன்ருவிடினும் கருத்து என்ன என்பது தெளிவாகவே உள்ளது.)

ஐதரேய உபநிஷதத்தின் கோட்பாடுபடி, ரயி எனும் சக்திதான் உலகின் மூல காரணமாகும். அந்த சக்தியைப் பெண் உருவில் கண்டனர் நம் பெரியோர். லலிதா உபாக்யானத்தில் அசுரரை அழிக்கத் தோன்றிய சக்தி எல்லா தேவதைகளுடைய சக்தியின் கூட்டு என்று விளக்கப்படுகிறது. செயல்பாடு இல்லாத ஆத்ம சுகானுபவ நிலையில் உள்ள அசைவற்ற ஜட நிலையே சிவம், அது செயல்படும் போது அத்துடன் ஒன்றுவது சக்தி. மஹா சக்தியாக தேவியை வர்ணிக்கும்போது தேவிக்கு பீம காந்த குணங்கள், பயத்தை உண்டு பண்ணுபவையும் மனத்தைக் கவர வல்லவையுமான குணங்கள் உண்டு. ஆனுல் லலிதா என்ற பெயர் தேவியின் நளினத்தைப் பெண்மையின் ஒப்பற்ற மென்மையை குறிக்கிறது. பயமின்றி மனங்குளிர உபாசனை செய்வதற்கென்றே இந்த உருவம் அமைக்கப்பட்டுள்ளது.

கவர்ச்சியில் மனம் கெட வகையேற்படலாம். அதனுல் சக்தி உபாசனையின் முதற்படியாக பாலாவின் உபாசனை வரையறுக்கப்பட்டுள்ளது. பதினுறு வயதுக்குட்பட்ட சிறுமி அவள். தேவி லீலைகள் புரிவதெல்லாம் அவள் உருவில் தான். அப்போது அவள் எட்டு வயதுச் சிறுமியாகக் கண்ணனின் பெண் உருவமாகத் திகழ்கிருள். அவள் செவ்வொளி திசைகளைச் சிவப்பாக்குகிறது. கையில் ஜபமாலை, புஸ்தகம், வர முத்திரை, அபய முத்திரை. கண்ணன் சொல்கிருன்: ''நானே பாலா என்று பாவிக்கப்படுகையில் பாலா நான்கு கரங்களுடன், சந்திர கலையுடன், உன்னதமான மார்பகத்துடன், செவ்வொளியுடன், தாமரை, கரும்பு வில், அங்குசம் பாணங்களுடன் ராஜேசுவரியாக விளங்குவாள்'' என்று.

பில்வமங்கள் செய்த தியானம் இன்னும் மனோகரமானது. அவருடைய கண்ணன்தான் அவருடைய பாலா. அவள் வனமாலையுடன், தலையில் மயிற்பீலி கொண்ட அழகிய கூந்தலுடன், காட்டுப் பூக்களால் அலங்கரிக்கப்பட்ட கொண்டையுடன், செம்பாறை குழம்பாலாகிய குங்குமத்துடன் (திலகத்துடன்), புல்லாங்குழல் இசையை ரசிப்பவளாக, மனத்தைக் கவரும் ஜகன் மோகன வடிவினளாக விளங்குகிருள். அவள் நிறம் தமால மரம் போன்று கருநீலமானது. அந்தப் பாலையை பரதேவதையாக பில்வமங்கள் வருணிக்கிருர்.

பாலா மந்திர பீஜாக்ஷரங்கள் மூன்று. அவையே ஐம் க்லீம் ஸௌ:। இவற்றை

எதிரிடையாக உள்ள ஸௌ: க்லீம் ஐம் என்று சேர்த்து ஆறு பீஜாக்ஷரங்களாக ஜபித்தால் அது பாலா திரிபுரசுந்தரி மந்திரம். அந்த சுந்தரி நிலக் கோடியில் நித்தம் தவம் செய்யும் குமரி அன்னை. மனம் ஒன்றி அவள் மந்திரத்தை ஜபித்தால் வீட்டில் நூபுர சப்தம் கேட்கும். இடையூறுகள், ஆபத்துக்கள் எல்லாம் தாமாகவே அகலும். இதை அந்த தேவியின் அளக்க முடியாத கருணையால் நான் என் சொந்த அனுபவத்தில் கண்டதுண்டு. இதை மற்றவர்கள் ஒப்புக் கொள்ளவேண்டும் என்பதற்காகவோ என் பிரதாபத்தை விளக்குவதற்காகவோ சொல்லவில்லை. நம்பிக்கையின் அடிப்படையில் சடுதியில் பயன் அளிக்கவல்லது பாலா மந்திரம் ஒன்றுதான் என்ற பேருண்மையை வெளிப்படுத்தவே இதை எழுதியுள்ளேன்.

தேவியின் மற்றொரு அழகிய உருவம் மாதங்கி. புராணத்தில் பிருகு முனிவருக்குச் சண்டாள நிலை தீர அவருக்குப் புதல்வியாகத் தோன்றியவள் மாதங்கி என்று கூறப்படுகிறது. இவளை மதுரையில் மீனாட்சியாகக் காணலாம். குறமாது போன்றவள், பச்சைக்குறத்தி என்றெல்லாம் அவளை வருணிப்பார் பெரியோர். உதாரணமாக, மதுரைப் பிராகாரத்தில் அருள்மிகு சித்தர் சிலை ஒன்று உண்டு. அவர் சுந்தரானந்தர் எனப்படுபவர். அவருக்கு மாதங்கி ப்ரத்யக்ஷம்! ஒரு சமயம் தேவி கூப்பிட்டால் வருவாளா என்று ஒரு பக்தன் கேட்டபோது, அவர் அந்தக் குறத்தி என்ன, கூப்பிட்டால் வராமல் போவாளா என்று பதில் கேள்வி கேட்டார். உடனே சதங்கையொலி கேட்டது. அன்னையின் தரிசனம் பக்தனுக்குக் கிட்டியது.

மாதங்கியே சியாமளை எனப்படுபவள். அவள் கலையரசி. வீணை மூலம் நாத ஸ்வரூபிணி என்பதை நினைவுறுத்துபவள். அவளை மந்த்ரிணி என்றும் கூறுவர். லலிதா அரசி என்றால், மாதங்கி மந்த்ரிணி. விசுக்ரனை அழித்தவள். மதுரையை ஆண்டபோது அழகனை கள்ளழகரின் அழகிய சகோதரியாக விளங்கியவள். அவர்கள் இணைப்பு சி கல்யாண உத்சவம் மூலம் நினைவுறுத்தப்படுகிறது.

## அழிவுக்குக் காரணம்

கழுகு, பருந்து, கோட்டான் இவை வீட்டின் மேற் கூரையில் அமர்ந்தால் சில காலம் கடந்தபின் வீட்டுக்காரனுக்கு அழிவை உண்டுபண்ணக் காரணமாகின்றன. துஷ்டன் வீட்டிற்கு அருகில் குடியிருந்தானால் அப்பொழுதே அந்த வீட்டுக்காரனுடைய அழிவுக்கு அவன் காரணமாகின்றான்.

—நீலகண்ட தீக்ஷிதர்

தொகுப்பு : பைங்காநாடு

சியாமளையே சாரதா. அவளுக்கு ஒரு வன தேவதை உருவமும் உண்டு. அர்ச்சுனனுக்கு பாசுபதம் அளிக்கச் சென்ற பரமசிவன் வேடன் உருவம் எடுத்தார். பார்வதி வேடுவச்சியானாள். 'கிராதாத்ருதா', 'புலிந்தினீ' என்று அவளுக்குப் பெயரும் அதனால் ஏற்பட்டது. அந்த உருவினை ஆராதிக்க ஒரு நீளமான மந்திரம் உண்டு. அதை ஜபித்து சித்தி பெற்றவர்கள் பிரச்னங்களுக்குப் பதில் அளித்தால் அது நூற்றுக்கு நூறு சரியாக இருக்கும். அந்த மந்திரம் இம்மைக்கு வேண்டிய பொருளையும், செழிப்பையும் அளிக்கவல்லது. அதனால் உலகில் கௌரவத்திற்கு ஆசைப்படுபவர்கள் இந்த மந்திரத்தை ஜபிப்பதுண்டு.

சுத்த சாரதை மேதா ஸரஸ்வதி யாவாள். அவள் பிரம்ம விசார ஸார ரூபமானவள். தொன்மையானவள். உலகில் பரந்து நிற்பவள். வீணை, புத்தகம், அபயம் முத்திரை, ஜபமாலை கொண்டவள், மதியீனத்தை அகற்றுபவள். பத்மாசனத்தில் அமர்ந்தவள். பரமேசுவரி, பகவதி, புத்திரூபிணி என்றெல்லாம் அவளை மார்க்கண்டேயர் வருணிக்கிறார். அவளுக்கு ஆறு பீஜங்கள் கொண்ட மந்திரம் ஒன்று உண்டு. ஓம் ஹ்ரீம் ஐம் க்ரீம் க்லீம் ஸௌ: என்ற இந்த பீஜாக்ஷரங்களைத் தளராது ஜபிப்பவர்கள் கல்வி கேள்விகளில் சிறந்தவர்களாகவும், ஆசைகள் அடங்கியவர்களாகவும் உலகம் மதிக்கும் புத்திமான்களாகவும் விளங்குவார்கள்.

**டி.வி.அனந்தராமசேஷன்**

# சின்மயானந்தரின் சிறுகதைகள்...

அன்று உலகம் தோன்றிய முதல்நாள் உலகத்தில் இருக்கவேண்டிய சகல ஜீவராசிகளுக்கும் பகவான் ஓர் அட்டவணை தயாரித்துவிட்டார். அவற்றுக்கு ஆயுட்காலம் எவ்வளவு என்பதைத் தீர்மானம் செய்யவேண்டி இருந்தது.

பகவானின் ஆணைப்படி நாரத முனிவர் ஒவ்வொரு ஜீவராசியையும் அழைத்து வந்தார். அவற்றிடமே அவை விரும்பும் ஆயுட்காலங்களைக் கேட்டு, அப்படியே வரமும் கொடுத்து அனுப்பி விட்டார் பகவான். ஊர்வன, பறப்பன, புழு, பூச்சிகள் ஆகியவை எல்லாம் முடிந்த பிறகு மிருகங்களின் பங்கும் வந்து சேர்ந்தது.

''உங்கள் எல்லாருக்கும் முப்பது ஆண்டுகள் ஆயுசு!'' என்று மொத்தமாக வரம் கொடுத்தார் பகவான். அவை எல்லாவற்றுக்கும் ரொம்ப மகிழ்ச்சி. கத்திக்கொண்டும், குதித்துக் கொண்டும், துள்ளி ஓடி ஊர்வலமாக உலகத்தை நோக்கி அவை புறப்பட்டன. கோடிக்கணக்கான ஜீவராசிகள் அப்படி ஆண்டவனின் அருளைப் பெற்றுப் புறப்பட்ட காட்சி பார்க்கப் பிரமாதமான ஒன்றாக இருந்தது.

''நாரதா! எல்லாரும் போய் விட்டார்களா?'' என்று கேட்டார் பகவான். எழுந்து வெளியே போய்ப் பார்த்துவிட்டுத் திரும்பிய நாரதர், ''இன்னும் நான்கு வகை ஜீவராசிகள் மட்டும் காத்துக் கொண்டிருக்கின்றன. அவை தங்களிடம் முறையிட விரும்புகின்றன!'' என்றார் நாரதர்.



''அப்படியா? நான் கொடுத்த வரம் அவர்களுக்குத் திருப்தியாக இல்லையா? அப்படியானால் ஒவ்வொன்றாக வரச் சொல்லு! நான் விசாரிக்கிறேன்'' என்றார் பகவான்.

முதலில் கழுதை உள்ளே வந்தது. பகவானின்முன்நின்று கண்ணீர்விட்டது. ''உன் குறையென்ன? சொல்லு! நான் போக்கிவிடுகிறேன்'' என்றார் பகவான்.

''ஆண்டவனே! தாங்கள் எதற்காக எனக்கு முப்பது ஆண்டுகள் ஆயுசைக் கொடுத்தீர்கள்? என் பிழைப்பு உங்களுக்குத் தெரியாதா? கொஞ்சம் வளர்ந்தவுடன் மூட்டைகளைச் சுமக்க வைப்பார்கள். சரியானபடி தீனி கிடைக்காது. சிறுவர் முதல் பெரியவர்வரை எல்லாருடைய கேலிக்கும் ஆளாவேன். வயது முதிர்ந்து யாருக்கும் பயன் படாமல் உணவின்றி நலிந்து இறந்து போவேன். இந்த வாழ்க்கைக்கு எனக்கு முப்பது ஆண்டுகள் தேவையா? தாங்கள்தாம் அருள்கூர்ந்து இதைக் குறைத்து அருள வேண்டும்'' என்றது கழுதை.

''பயப்படாதே! உன் ஆயுளைப் பதினெட்டு ஆண்டுகளாகக் குறைக்கிறேன். மனிதன் உன்னைத் துன்புறுத்தினாலும் நீ சுத்தமான துணிகளைச் சுமப்பாய். உன் குரல் நல்ல சகுனமாகக் கருதப்படும்'' என்று வரம் கொடுத்து அனுப்பினார் பகவான். அடுத்ததாக நாய் உள்ளே நுழைந்தது. தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டது. பகவான் அதன் குறையை விசாரித்தார்.

''ஆண்டவனே! தாங்கள் அறியாததா? நான் இரவு பகலாகத் தூக்கமின்றி ஓடித் திரிந்தாக வேண்டும். என் பெயரைத் திட்டுவதற்கேற்ற இழி சொல்லாக உபயோகிப்பார்கள். சிறுவர்களும் என்னைக் கல்லால் அடித்துத் துன்புறுத்துவார்கள். இந்த நாய்ப் பிழைப்புக்கு முப்பது ஆண்டுகள் எதற்கு? குறைத்தருள வேண்டும் சுவாமி!'' என்று புலம்பியது நாய்.

''அப்படியா? சரி! நீ பன்னிரண்டு ஆண்டுகள் வாழ்ந்தால் போதும். அதிலும் நீ நல்லபடியாக நடந்து கொண்டால், உன்னை வீட்டில் வைத்துச் சோறு போடுவார்கள். நீ நன்றியுள்ள மிருகம் என்றும் பெயர் பெறுவாய்'' என்று ஆசி கூறி அனுப்பினார் பகவான். நாய் வெளியே வரும்வரை காத்திருந்த குரங்கு உள்ளே ஓடி வந்து தலைக்கு மேல் கைகூப்பி இரண்டு காலில் நின்றபடி வணங்கிற்று.

''உனக்கென்ன குறை?'' என்று சிரித்துக் கொண்டே கேட்டார் பகவான்.

''எனக்குமா முப்பது ஆண்டு ஆயுள்? யோசித்துப் பாருங்கள் கடவுளே! என்னால் உழைத்துப் பிழைக்க முடியாது. விஷமம் செய்தே நான் காலந் தள்ளியாக வேண்டும். தற்காப்புக்காக மரத்துக்கு மரம் தாவியாக வேண்டும். கிளைகளைப் பிடித்துக் கொண்டு தொங்க வேண்டும். முப்பது வயது வரையில் நீங்கள் என்னை வாழச் செய்துவிட்டால் முதிய பருவத்தில் எப்படி இவற்றைச் செய்வேன்? கொஞ்சம் அருள்கூர்ந்து என் ஆயுட்காலத்தைக் குறையுங்கள்!'' என்று கேட்டது குரங்கு.

''சரி! உனக்கு இருபது ஆண்டுகாலம் போதும். ஆனால், நீ நல்லபடியாகப் பிழைத்துக் கொள்வாய். ஆண்டவனின் தொண்டன் என்று பூஜிக்கப்படுவாய். உன்னைத் துன்புறுத்துவதும் பாபமாகக் கருதப்படும். கவலைப்படாமல் போய்ச் சேர்!'' என்று கூறி அனுப்பினார் கடவுள்.

கடைசியாக உள்ளே வந்தான் மனிதன். ஆண்டவனைக் கையெடுத்துக் கும்பிட்டான். ''உனக்கென்னப்பா குறை?'' என்று கேட்டார் கடவுள்.

''சுவாமி! எனக்கு முப்பது வயது தான் கொடுத்திருக்கிறீர்கள். கல்வி கற்கவும், வேலையில் சேரவும், மணம் செய்து கொள்ளவும் இந்த வயது சரியாகப் போய்விடும். அப்புறம் நான் வாழ்க்கையை அநுபவிப்பது எங்கே? நானும் என் துணைவியும் பெறும் குழந்தைகளைக் காப்பாற்றுவது யார்? அவர்கள் வளர்ந்து எங்களைக் காப்பாற்றுவது எப்படி? எனக்கு ஆயுட் காலத்தைக் கூட்டிக் கொடுக்கவேண்டும் ஆண்டவனே!'' என்று கேட்டான் மனிதன்.

கடவுளின் முகம் வாடிப் போய் விட்டது. நெற்றி சுருங்கிற்று. ஒரு கணம் மனிதனை அனுதாபத்துடன் பார்த்தார். பிறகு மனிதனை ஆசீர்வதித்து ''சரி அப்பா! உன் விருப்பப்படி நடக்கட்டும். உனக்குக் கொடுத்த முப்பது ஆண்டுகளுடன், கழுதையின் பதினெட்டு ஆண்டுகளையும், நாயின் பன்னிரண்டு ஆண்டுகளையும், குரங்கின் இருபது ஆண்டுகளையும் சேர்த்துக் கொள். மொத்தம் எண்பது வயது கிடைக்கும். சாமர்த்தியம் இருந்தால் அதற்குப் பிறகும் வாழ்ந்து கொள்!'' என்றார் பகவான்.

மனிதனுக்கு ஒரே சந்தோஷம்! கீழே விழுந்து வணங்கிவிட்டு ஓடிவிட்டான். பகவான் உற்சாகமின்றி உட்கார்ந்திருந்தார். நாரதர் அவரை வணங்கி ''ஆண்டவனே! மனிதனின் வேண்டுகோள் தவறா? ஏன் இப்படிச் சோர்ந்து போய் உட்கார்ந்துவிட்டீர்கள்?'' என்று கேட்டார்.

''ஆமாம் நாரதா! நான் கொடுத்த முப்பது ஆண்டுகளுக்குத்தான் அவன் சிரமமின்றி, உடல் ஆரோக்கியத்துடன் பிறர் உதவியை நாடாமல் வாழ முடியும். அத்துடன் அவன் பிழைத்துப் போயிருக்கலாம்! தெரியாத்தனமாக மேலும் ஆயுள் வேண்டும் என்று கேட்டு வாங்கிக் கொண்டான். இப்போது நடக்கப்போவதென்ன? அடுத்த பதினெட்டு ஆண்டுகளுக்குக் கழுதையைப் போலவே வேலையில் சுமையையும்,

(32-ம் பக்கம் பார்க்க)

# பாலஜோசியர் நட்சத்திர



**ரௌத்ர வருஷம் ஆடி மாதம் 6-ம் தேதி முதல் 21-ம் தேதி வரை (21-7-80 முதல் 5-8-80 வரை)**

## அசுவனி (மேஷம்)

**சு—சே—சோ—ல**

இந்தப் பதினைந்து நாட்களில் உங்களுக்குப் பலவிதமான நன்மைகள் உண்டாவதற்குக் காரணமாகிறார் குரு பகவான். அவருக்குத் துணையாக சுக்ரனும், செவ்வாயும் சஞ்சரித்துக் கொண்டிருக்கிறார்கள். பொன்னான நேரம் கனிவதற்குத் தடையேது! பெரியோர் ஆசி கிடைக்கும். பொருளாதார சுபிட்சம் ஓங்கும். அரசுப் பணிகளில் இதுவரை இருந்துவந்த மந்த நிலை நீங்கும். அரசியல்வாதிகள் சுறுசுறுப் படைவர். அன்றாடப் பிரச்சினைகளில் சுருதி பேதமற்றச் சுமுகம் நிலவும். கல்வித்துறையிலுள்ள விற்பன்னர்கள் பாராட்டப்படுவார்கள். விவசாயிகளுக்கு ஏற்றமான நேரம் இது. மருத்துவத் துறையில் உள்ளவர்களுக்குப் புகழ் கிடைக்கும்.

முருகப் பெருமானைத் துதித்துப் புதிய முயற்சிகளில் துணிவோடு இறங்குவதற்கும் இது உகந்த நேரம். கலைத் துறையில் சம்பந்தப்பட்ட எழுத்தாளர்கள், கலைஞர்கள், நடிகர்கள் ஆகியோருக்குப்பொருளுடன் புகழும் கிடைக்கும். காதலர்கள் தங்களுடைய களியாட்டங்களில் ஓர் உச்சகட்டத்தை அடைய வாய்ப்புண்டு. பெற்றோர் சம்மதத்துடன் முறையான திருமண வாழ்வுக்கு முயல அவர்களுக்கு இது நல்ல நேரம். வேலை தேடிக் கொண்டிருப்பவர்களுக்கு அதற்கான வேலை கனிந்து வரும். குடும்பத்தில் சுபிட்சம் பொங்கும். தம்பதியரிடையே களிப்பான சூழ்நிலை ஓங்கும். வியாபாரிகள் எச்சரிக்கையாக இருப்பது அவசியம். முதலாளி — தொழிலாளி உறவில் சிறு சலசலப்புக்கு இடமேற்படலாம். பயணத்தைத் தவிர்ப்பது நல்லது.

*ஜூலை 22, 26, 28, 30 ஆகஸ்டு 1, 3— நல்ல நாட்கள்.*

## பரணி (மேஷம்)

**லி—லு—லே—லோ**

மேலான நற்பலன்கள் சிலவற்றை நீங்கள் பெற வாய்ப்புண்டு. சுக்ரனும் செவ்வாயும் உங்கள் வாழ்க்கையின் சந்துஷ்டிக்கு உத்திரவாதம் அளிக்கிறார்கள். அரசு அலுவலர்களுக்குப் பிரச்சினை ஏதும் உருவாக இடமில்லை. அரசாங்கப் பணிகளில் இதுவரையில் இருந்துவந்த தாமதம் நீங்க வாய்ப்புண்டு. விவசாயிகளுக்கு வில்லங்கம் ஏதும் உருவாக இடமில்லை. மருத்துவத்துறையில் உள்ளவர்களுக்கு மந்த நிலை இருக்காது. பொறியியல், விஞ்ஞானம், கணிதம் போன்ற இனங்களில் பணியாற்றுவோருக்கு உற்சாகப் போக்குக் காணப்படும். மிகுந்த பிரயாசைப்பட்டே வியாபாரிகள் அளவான லாபத்தைப் பெற முடியும். ஆசிரியர்—மாணவர் உறவில் சுமுகம் சோதனைக்கு உள்ளாகலாம்.

கலைத் துறையில் சம்பந்தப்பட்ட எழுத்தாளர்களுக்கு ஏற்றமாக இருக்கும். நடிகர்கள், கலைஞர்கள் தக்க சம்மானம் பெறுவர். திருமணமாகாதவர்களுக்கு அதற்கான முயற்சிகளில் தற்போது ஈடுபட்டால் காரியம் கைகூடி வரும். காதலர்கள் தங்களுடைய களியாட்டங்களில் ஒரு நிறைவைக் காண்பர். குடும்பத்தில் சுபிட்சம் நிறைந்திருக்கும். கணவன் — மனைவியரிடையே மகிழ்ச்சி பொங்கும். பெரியோர் சகவாசத்தை விரும்பிப் பெறுங்கள். பொது இடங்களில் அளந்து பேசினால் அவதி ஏற்படாது. முன்விரோதம் காரணமாக சிலர் வீண் வம்பில் சிக்க நேரலாம். எச்சரிக்கை. வீடு, நிலம் போன்ற இனங்களில், வழக்கு வியாஜ்ஜியங்கள் இருந்தால் அதைத் தற்போது தள்ளிப் போடுங்கள். ரேஸ்-லாட்டரிகளில் பிரவேசிக்க வேண்டாம்.

*ஜூலை 21, 23, 25, 27, 28, 30, ஆகஸ்டு 2, 4 —நல்ல நாட்கள்.*

# ராசிபலன்கள்..

## கிருத்திகை 1-ம் பாதம் (மேஷம்) 2,3,4-ம் பாதங்கள் (ரிஷபம்)

அ—இ—உ—ஏ

முதல் பாதத்தில் பிறந்த மேஷ ராசிக்காரர்களுக்குக் கோசாரம் நல்ல விதமாக அமைந்திருக்கிறது. குரு உங்களுக்குச் சில நன்மைகளைச் செய்ய முடியும். தற்போது சிம்மத்திலுள்ள சனி கன்னிக்குச் சென்றதும் மேலும் சிறப்படைவீர்கள். பதவி உயர்வுக்குக் தகுதிவாய்ந்த அரசு அலுவலர்கள் அதற்கான முயற்சியில் தற்போது ஈடுபடலாம். கற்றறிந்த மேலோர் கௌரவிக்கப்படுவர். விவசாயிகளுக்கு வில்லங்கம் ஏதும் உருவாகாது. சொல்ப லாபத்தைப் பெறுவதற்கும் வியாபாரிகள் மிகுந்த எச்சரிக்கையோடு இருக்க வேண்டும். திருமணமாகாதவர்களுக்கு அதற்கான வேளை கனிந்து வரும். எழுத்தாளர்கள் ஏற்றம் பெறுவர். நடிகர்களுக்குப் புதிய ஒப்பந்தங்களில் கையெழுத்திடும் வாய்ப்புத் தற்போது ஏற்படும். குடும்பத்தில் சமுகம் நிலவும். கணவன் — மனைவியரிடையே களிப்பானச் சூழ்நிலை நீடிக்கும்.

21-7-80 முதல் 5-8-80 வரை கிரகநிலை

| | | | |
|---|---|---|---|
| | | சுக்ரன் | புதன் |
| | 27-7-80 முதல் கன்னி சனி<br>28-7-80 முதல் மிதுனம் சுக்ரன்<br>4-8-80 முதல் கடகம் புதன் | | சூரியன்<br>ராகு |
| கேது | | | குரு<br>சனி |
| | | | செவ்வாய் |

கடைசி மூன்று பாதங்களில் பிறந்த ரிஷபராசிக்காரர்களுக்குச் சூரியன், சுக்ரன், புதன் இவர்களுடைய அருளால் நற்பலன்கள் விளைய இடமுண்டு. அரசு அலுவலர்களுக்கு உற்சாகப் போக்கு நீடிக்கும். அரசாங்க கௌரவத்தைப் பெறவும் சிலருக்கு வாய்ப்புண்டு. வியாபாரிகளுக்கு முதற்பகுதி லாபகரமாக இருக்கும். பிற்பகுதியில் எச்சரிக்கையாக இருந்தால் நஷ்டத்தைத் தவிர்க்கலாம். பொறியியல், விஞ்ஞானம், கணிதம் போன்ற துறைகளில் பணியாற்றுவோர் புதிய முயற்சிகள் எதிலும் தற்போது ஈடுபடவேண்டாம். இயந்திரங்களை இயக்குவிக்கும் பணியில் உள்ள தொழிலாளர்கள் எச்சரிக்கையாக இருந்தால் எந்தவித சிறு காயமும் இன்றி தப்பிக்கலாம். காதலர்கள் தங்கள் களியாட்டங்களில் உச்ச கட்டத்தை அடைய முடியும். கலைத் துறையில் உள்ளவர்கள் ஏற்றம் காண்பர். பயணம் தவிர்ப்பது நல்லது. குடும்பத்தில் சுபிட்சம் நிறைந்திருக்கும்.

ஜூலை 22, 29, 31, ஆகஸ்டு 1, 3— நல்ல நாட்கள்.

## ரோகிணி (ரிஷபம்)

ஓ—வ—வி—வு

சுக்ர சஞ்சாரம் சிறப்பாக இருக்கிறது. சூரியன்கூட நல்ல இடத்தில் இருக்கிறார். இதனால் உங்கள் கௌரவம் காக்கப்படுவதோடு, பொருளாதார சந்துஷ்டிக்கும் வழி பிறக்கும். அரசு அலுவலர்களுக்கு மேலதிகாரிகளின் கருணைப் பார்வை கிட்டவும் வாய்ப்புண்டு. குருவும், சனியும் நல்ல இடத்தில் இல்லாததால் ஏற்படும் குறையை, அவர்கள் நட்சத்திர ரீதியாக அனுகூலமாக இருப்பதன் மூலம் நிவர்த்தி செய்வார்கள். இதனால், உங்கள் தொழிலில் முன்னேற்றமும், பெரியோர்களின் ஆசியும் பெற முடியும். விவசாயிகளுக்குச் சுமாரான நேரந்தான். மருத்துவத் துறையில் உள்ளவர்கள் கவனமாக இருந்தால் பழிச் சொல் வராமல் தப்பிக்கலாம்.

மற்றவர்களிடம் பழகுவதில் இனிமையைக் கையாளுவீர்கள். இதனால் பயனும் உண்டாகும். வியாபாரிகளுக்கு அளவான லாபம் இலகுவாகவே கிடைக்க இடமுண்டு. வித்தைகளில் தேர்ச்சியும், விஷயங்களை அறிவதில் ஆர்வமும்

ஓங்கும். கடிதப் போக்குவரத்தில் கண்ணியத்தைக் காக்கும் குணம் மேலோங்குமாதலால் கவலை இல்லை. பயணத்தைத் தவிர்ப்பது நல்லது. காதலர்கள் தங்களுடைய காதலைப் பெற்றோருக்குத் தெரிவித்து முறையான குடும்பவாழ்வுக்கு முயல இது நல்ல நேரம். பிள்ளைகளின் நல்வாழ்வை முன்னிட்டு சில பயனுள்ள காரியங்களைச் செய்ய நேரும். குடும்பத்தில் சுபிட்சம் நிறைந்திருக்கும்.

ஜூலை 21, 23, 27, 29, 31 ஆகஸ்டு 2, 4, நல்ல நாட்கள்.

## மிருகசீரிஷம் 1,2-ம் பாதங்கள் (ரிஷபம்) 3,4-ம் பாதங்கள் (மிதுனம்)

**வே—வோ—கா—கி**

முன்னிரண்டு பாதங்களில் பிறந்த ரிஷபராசிக்காரர்களுக்கு நன்மைகளும் தீமைகளும் கலந்தவாறு நடக்கக்கூடிய நேரம் இது. சூரியனும், சுக்ரனும் நல்ல இடத்தில் இருக்கிறார்கள். இதனால் உங்கள் அந்தஸ்துக்கு ஊறு நேராது. அன்றாடப் பிரச்சினைகளில் தொய்வு உண்டாகவும் இடமில்லை. குருபகவான் நல்ல இடத்தில் இல்லாததால் ஏற்படும் சில சங்கடங்களை எதிர் நோக்க வேண்டியிருக்கும். என்றாலும், அதைத் சமாளிக்கும் ஆற்றலை புதன் வழங்குவார். சனியினால் சில அவதிகள் வரலாம். குருப்பிரீதியாகவும், சனிப்பிரீதியாகவும் தரும காரியங்களில் ஈடுபட்டால் தொல்லைகள் மட்டுப்பட இடமுண்டு. வியாபாரிகளுக்கு அளவான லாபம் இருந்து வரும். கலைத்துறையில் உள்ளவர்கள் ஏற்றம் காண்பர். குடும்பத்தில் சுபிட்சம் நிறைந்திருக்கும்.

கடைசி இரண்டு பாதங்களில் பிறந்த மிதுன ராசிக்காரர்களுக்கு குரு நல்ல இடத்தில் சஞ்சரிக்காததால் சில சங்கடங்களைச் சந்திக்கவேண்டிய நிர்ப்பந்தம் உருவாகலாம். குருப் பிரீதியாக கற்றறிந்த மேலோர்களை வரவழைத்து அவர்கள் உள்ளம் குளிர உணவிட்டு மகிழுங்கள். இதனால் அந்தக் குளிர்ந்த உள்ளங்களின் நல்லாசி கிடைத்து கஷ்டங்கள் மட்டுப்பட இடமேற்படும். சனியின் சஞ்சாரம் உன்னதமாக இருப்பதால் புனிதப் பணிகளில் உள்ளம் செல்லும். இதனால் மனத்துக்கு ஓர் அமைதி கிடைக்கும். முதலாளி — தொழிலாளி உறவில் நல்லிணக்கம் ஏற்படும். வியாபாரிகளுக்கு லாபகரமான போக்கு இருக்கும். காவல், ராணுவம் போன்ற துறைகளில் உள்ளவர்களுக்குச் சிறு சோதனை உண்டாகலாம். கலைத்துறை சிறக்கும். குடும்பத்தில் குதூகலம் தாண்டவமாடும்.

ஜூலை 22, 24, 30 ஆகஸ்டு 1, 3, 5—நல்ல நாட்கள்.

## திருவாதிரை (மிதுனம்)

**கு—க—ஙு—ச**

நற்பலன்கள் சற்றுக் கூடுதலாகவும், தீய பலன்கள் சற்றுக் குறைவாகவும் நடக்கக்கூடிய நேரம் இது. குரு நல்ல இடத்தில் இல்லை என்றாலும் நட்சத்திர ரீதியாக அனுகூலமாக இருப்பதால் உங்கள் அந்தஸ்துக்கு எந்தவிதமான சோதனையும் வராது. அரசு அலுவலர்கள் 'தான் உண்டு தன் வேலை உண்டு' என்று இருந்தால் வம்பில்லை. ஆசிரியர் மாணவர் உறவு சுமுகமாக இருக்கும். முதலாளி — தொழிலாளி உறவில் ஓர் இணக்கம் ஏற்பட்டு அதனால் ஸ்தாபனம் சிறக்கும். உழைப்புக்கேற்ற ஊதியம் பெறுவதில் சிக்கல் இருக்காது. புனித மார்க்கத்தில் சிலருடைய சிந்தனை சென்று அதனால் சந்துஷ்டி பெறவும் வாய்ப்புண்டு.

வியாபாரிகள் உரிய லாபத்தைப் பெற இயலும். முன் விரோதம் காரணமாகச் சிலர் அல்லல்பட நேரும். அவசரப்பட்டுச் சில காரியங்களில் ஈடுபட்டு அதனால் அவதி உண்டாகவும் இடமுண்டு. வெற்றிவேல் முருகனை அன்றாடம் தொழுதுவந்தால் அவதிக்குறைய இடமுண்டாகும். பொறியியல், விஞ்ஞானம், கணிதம் போன்ற துறைகளில் பணியாற்றுவோர் புதிய முயற்சிகளில் தற்போது ஈடுபடாமல் இருப்பது நல்லது. கலைத்துறையில் சம்பந்தப்பட்ட அனைவர்க்குமே ஓரளவுக்கு ஆதாயப் போக்குக் காணப்படும். பயணம் பயன் அளிப்பது துர்லபமே. உடல்நிலை பாதிக்கப்படவும் இடமுண்டு. குடும்பத்தில் சுபிட்சம் குறையாது.

ஜூலை 21, 23, 25, 31, ஆகஸ்டு 2, 4. — நல்ல நாட்கள்.

## புனர்ப்பூசம் 1,2, 3-ம் பாதங்கள் (மிதுனம்) 4-ம் பாதம் (கடகம்)

**கே—கோ—ஹா—ஹி**

முன் மூன்று பாதங்களில் பிறந்த மிதுனராசிக்காரர்களுக்குச் சுமாரான நேரந்தான். குருபலம் இல்லாததால்

சில சங்கடங்களைச் சந்திக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படும். குருப்பிரீதியாக வேதம் அறிந்த விற்பன்னர்களை அணுகி அவர்களுடைய ஆசியைப் பெறுங்கள். இதனால் தீய தன்மைகள் மட்டுப்பட வழி உண்டாகும். அரசியல் வாதிகளுக்கு அபவாதம் வர இடமுண்டு. அரசு அலுவலர்கள் மேலதிகாரிகளின் சினத்துக்கு ஆளாக நேரலாம். வியாபாரிகளுக்குப் பரவாயில்லை. விவசாயிகளுக்குச் சோதனை வர இடமுண்டு. கலைத்துறையில் சம்பந்தப்பட்டவர்களுக்கு மாமூல் பணிகள் செவ்வனே நடக்கும். காதலர்கள் தங்களுடைய காதலைப் பெற்றோருக்குத் தெரிவித்து விட இது நல்ல நேரம். பயணம் தவிர்க்கப்படவேண்டும். குடும்பத்தில் சுமுகம் நிலைக்கும். தாம்பத்தியம் சிறப்பாக இருக்கும்.

கடைசி பாதத்தில் பிறந்த கடக ராசிக்காரர்களுக்கு நல்ல நேரம் என்று தான் சொல்லவேண்டும். குரு, சுக்ரன், செவ்வாய் ஆகிய கிரகங்களின் உலா உசிதமாக இருக்கிறது. இதனால் உங்களுடைய அந்தஸ்து மேலோங்கவும் வழியுண்டு. அரசு அலுவலர்களுக்கு உற்சாகப் போக்கு உருவாகும். கல்வித் துறையில் ஈடுபட்டுள்ள அறிஞர்களுக்கு உரிய கௌரவம் கிடைக்கும். மதப் பிரசாரகர்கள், பிரசங்கிகள் போன்றவர்கள் பாராட்டுடன் தகுந்த சன்மானமும் கிடைக்கப் பெறுவர். விவசாயிகளுக்கு வில்லங்கம் ஏதும் உருவாகாது. நிலம், வீடு போன்ற இனங்களில் வில்லங்கம் இருந்தால் அதைத் தீர்த்துக்கொள்ள இது உகந்த நேரம். கலைஞர்கள் போற்றப்படுவார்கள். கலைத் கலைத்துறை சிறக்கும். வியாபாரிகளுக்கு அளவான லாபம் வர மிகவும் பாடுபடவேண்டும். குடும்பத்தில் குதூகலம் தாண்டவமாடும்.

ஜுலை 22, 24, 26, ஆகஸ்டு 2, 4, நல்ல நாட்கள்.

## பூசம் (கடகம்)

**ஹூ—ஹே—ஹோ—ட (D)**

குருபகவான் நல்ல இடத்தில் இருக்கிறார். உங்களுக்கு நன்மைகள் சிலவற்றை அவர் தாராளமாக வழங்குவார். கௌரவம் நிலைத்திருக்கும். அரசு அலுவலர்களுக்கு மேலதிகாரிகளின் ஆதரவு கிடைக்கும். ஆசிரியர்துறை சிறப்பளிக்கும். விவசாயிகளுக்கு ஏற்றமான நேரமாக இருக்கும். பொறியியல், கணிதம், விஞ்ஞானம் போன்ற துறைகளில் உள்ளவர்கள் தங்களுடைய புதிய சாதனைகளுக்கான அடிப்படைக் காரியங்களைச் செய்யலாம். மருத்துவர்கள் சிறப்படைவார்கள். தெய்வபணி, தருமப்பணி போன்ற நற்காரியங்களில் மனம் ஈடுபட்டு, அதனால் மகிழ்வு கொள்ளவும் வாய்ப்புண்டு. பெரியோர் நல்லாசியும், பொருளாதார சுபிட்சமும் பெற இடமுண்டு. தொழில் சிறக்கும்.

வியாபாரிகளுக்குச் சுமாரான நேரந்தான். சமத்காரமாக இருந்தால் நஷ்டத்தைத் தவிர்க்கலாம். வித்தைகளை கற்பதில் இடையூறு உண்டாகலாம். அனாவசியமாகச் செலவு ஏற்படவும் இடமுண்டு. அதே நேரத்தில் எதிர்பாராமல் பொருள்வரவுக்கும் ஓர் அமைப்பு வழி வகுக்கும். பெரிய தொழிலகங்களில் பணிபுரியும் தொழிலாளர்களுக்குச் சிறு சோதனை உண்டாகலாம். விவசாயிகளுக்கு உசிதமான நேரமாக இருக்கும். வீடு, நிலம், தோட்டம் போன்ற இனங்களில் ஏதேனும் வியாஜ்ஜியம் இருந்தால் அதனைத் தீர்த்துக் கொள்ள இது நல்ல நேரம். கலைத்துறையில் உள்ளவர்களுக்கு உற்சாகம் மேலோங்கும். குடும்பம் சுபிட்சமாக இருக்கும். கணவன் மனைவியரிடையே களிப்பான சூழ்நிலை உருவாகும். உடல்நலம் சற்று பாதிக்கப்படலாம். பயணத்தைத் தவிர்பது நல்லது.

ஜுலை 21, 23, 25, 27, 28, ஆகஸ்டு 1, 3, 5 — நல்ல நாட்கள்.

## ஆயில்யம் (கடகம்)

**டி—டு—டே—டோ (D)வரிசை**

குருவும், செவ்வாயும் நல்ல இடத்தில் இருந்தாலும் நட்சத்திர ரீதியாக சற்று பலவீனப்பட்டிருக்கிறார்கள். இதனால் உங்களுக்கு ஏற்பட இருந்த நற்பலன்களில் சிறிது கட்டுப்பாடு ஏற்படும். குருப்பிரீதியாக வேதம் அறிந்த விற்பன்னர்களை வரவழைத்து அவர்கள் உள்ளம் குளிர உணவிட்டு வாருங்கள். அந்தக் குளிர்ந்த உள்ளங்களின் நல்லாசி உங்களுக்கு நல்வாழ்வு அளிக்க உதவும். மனோதிடமும் காரியசித்தியும் ஏற்பட செந்தில் ஆண்டவனை துதித்து வாருங்கள். உங்கள் அந்தஸ்துக்கு ஊறு நேரா வண்ணம் நிலைமை விருத்தியாகும். கல்வித் துறையில் உள்ளவர்களுக்கு கௌரவம் ஓங்கும்.

அரசு அலுவலர்களுக்குப் பிரச்சினை உருவாகாது. அன்றாடப் பணிகளில் தொய்வு உண்டாகாது. பொருளாதார நிலைமையில் சரிவு வர இடமில்லை. பொறியியல், விஞ்ஞானம், கணிதம் போன்ற துறைகளில் உள்ளவர்கள் தம் பணிகளைச் செவ்வனே செய்ய எந்த இடையூறும் நேராது. விவசாயிகளுக்கு வில்லங்கம் ஏதும் வர இடமில்லை. கற்பனையில் சுநாதம் ஒலிக்கும். கலைத்துறையில் உள்ளவர்கள் ஏற்றம் பெறுவர். குறிப்பாக இயந்திரத் தொழிலில் சம்பந்தமுள்ள-கலை நுணுக்கப் பணிகளில் சிறப்பு மிளிரும். முதலாளி — தொழிலாளி உறவில் விரிசல் வர இடமில்லை. காதலர்கள் கௌரவிக்கப்படுவார்கள். குடும்பத்தில் சுபிட்சம் நிறைந்திருக்கும். பயணத்தைத் தவிர்ப்பது நல்லது. உடல்நிலை சற்று பாதிக்கப்படலாம். ரேஸ்—லாட்டரி இனங்களில் பிரவேசிக்க வேண்டாம்.

ஜூலை 22, 24, 26, 28, 29, ஆகஸ்டு 2, 4 — நல்ல நாட்கள்.

## மகம் (சிம்மம்)

**ம—மி—மு—மே**

ஓரளவுக்கு நன்மை விளைய இடமுண்டு. ஜன்ம குரு நல்லவேளையாக நட்சத்திர ரீதியாக அனுகூலமாக இருப்பதால் தொல்லைகள் ஏற்பட்டாலும் அவற்றைச் சமாளிக்கும் ஆற்றலும் இருந்துவரும். மிதுனத்தில் புதன் இருப்பது விசேஷம். அதுவும் உங்கள் ராசிக்கு 11-ம் இடத்தில் இருப்பது சிலாக்கியமாகும். கேதுவுக்கும் ஒரு மகத்துவம் உண்டு. மற்ற கிரகங்களினால் நற்பயன் விளைய இடமில்லை என்றாலும் தீய பலன்களின் தன்மையில் ஒரு கட்டுப்பாட்டைத் தோற்றுவிக்கும் ஆற்றல் இவ்விரு கிரகங்களுக்கும் உண்டாகும். உங்கள் உள்ளம் எதையும் தாங்கும் சக்தியைப் பெறும். புனித காரியங்களில் ஈடுபாடும், வேதாந்த சிந்தனைகளும் உங்களை உறுதிவாய்ந்தவராக்கும். தக்க சமயத்தில் சான்றோரின் ஆசி கிடைக்கும். பொருளாதார நிலையில் சிறுகச்சிறுக அபிவிருத்திக்கான சூழ்நிலையும் உருவாகும்.

வியாபாரிகளுக்கு லாபகரமானப் போக்குத் தடைபட இடமில்லை. வித்தைகளில் பயற்சியும் தேர்ச்சியும் இலகுவாகக் கிடைக்கும். ஆசிரியர்—மாணவர் உறவில் சலசலப்புக்கு இடமில்லை. அரசாங்கப் பணியாளர்களுக்குச் சுமாரான நேரம். வீண் வம்பில் சிலர் சிக்க நேரலாம். முதலாளி—தொழிலாளி உறவில் விரிசல் வர இடமுண்டு. உலோகத் தொழிலில் ஈடுபட்டுள்ள தொழிலதிபர்களுக்கு ஒரு சோதனை வரலாம். பொறியியல், காண்ட்ராக்ட் போன்ற துறைகளில் உள்ளவர்கள் நிதானப் போக்கைக் கடைப்பிடிப்பது அவசியம். கலைத்துறையில் ஈடுபட்டுள்ளவர்களுக்குப் போகப் போக நிலைமை சரியாகும். குடும்பத்தில் பொறுப்புணர்ந்து ஒவ்வொருவரும் நடந்து கொண்டால் பிற்பகுதி மகிழ்ச்சியாக கழியும். ரேஸ்—லாட்டரி இனங்களில் பிரவேசிக்க வேண்டாம்.

ஜூலை 21, 23, 25, 27, 28, 30 ஆகஸ்டு 3, 5 —நல்ல நாட்கள்.

## பூரம் (சிம்மம்)

**மோ—ட—டி—டு (T-வரிசை)**

கோசாரம் சரியில்லை என்றாலும் ஓரிரு நற்பயன்கள் விளைய புதன் உதவுவார். அரசுப் பணியாளர்கள் 'தான் உண்டு தன் வேலை உண்டு' என்று இருந்துவந்தால் வம்பு வராது. அரசாங்க காரியங்களில் ஒரு முடிவுக்கு வர இது உகந்த நேரமல்ல. வழக்கு, வியாஜ்ஜியங்கள் இருந்தால் அதைத் தற்போது தள்ளிப்போடுவது நல்லது. பொறியியல், விஞ்ஞானம், கணிதம் போன்ற துறைகளில் உள்ளவர்கள் எந்தப் புதிய முயற்சியிலும் தற்போது ஈடுபட வேண்டாம். நிறுவன நிர்வாகிகளுக்குச் சில சோதனைகள் வரக்கூடும். எனினும் அச்சோதனைகளில் வெற்றி கிடைக்கவும் வாய்ப்புண்டு.

முதலாளி — தொழிலாளி உறவு சிறக்க இருசாரருமே முயல்வது உத்தமம். ஏற்கெனவே உள்ள தொழிற் தகராறுகள் குறித்து தற்போது ஒரு தீவிர முடிவுக்கு வராமல் இருப்பது நல்லது. சிறு தொழிலில் ஈடுபட்டுள்ளவர்களுக்குச் சங்கடம் விளையாது. குருப் பிரீதியாக சான்றோர்களை அணுகி அவர்களுடைய நல்லாசியைப் பெற்றுவந்தால் ஜன்ம குருவினால் ஏற்படும் சங்கடங்கள் குறைய இடமுண்டு. நட்சத்திர ரீதியாக சனி நல்லவிதமாக இருப்பதால் அவரால் ஏற்பட இருந்த தொல்லைகளும் மட்டுப்படும். சுக்ர சஞ்சாரம் சரியில்லை. குடும்பத்தில் சச்சரவுக்கு இடமுண்டு. உடல் நிலை பாதிக்கப்பட்டு

அதனால் பெரும் செலவு செய்யவேண்டியும் நேரலாம். காதலர்கள் தங்களுடைய காதல் விவகாரங்களை கட்டுப்படுத்திக் கொள்ளவேண்டும். புனித கருமங்களை செய்தும், தெய்வ சிந்தனைகளில் ஆழ்ந்தும் மன அமைதி பெற முடியும்.

ஜுலை 22, 24, 26, 28, 29 ஆகஸ்டு 4 — நல்ல நாட்கள்.

## உத்திரம் 1-ம் பாதம் (சிம்மம்) 2, 3, 4-ம் பாதங்கள் (கன்னி)

டே—டோ—பா—பி

முதல் பாதத்தில் பிறந்த சிம்மராசிக்காரர்களுக்கு இந்தப் பதினைந்து நாட்களில் சிறிதளவு நன்மைகள் விளைய இடமுண்டு. ஜன்மத்திலுள்ள கிரகங்களில் குரு நட்சத்திர ரீதியாக சாதகமாக இருக்கிறார். இதனால் உங்கள் அந்தஸ்துக்கு ஊறு நேராது. அன்றாடப் பிரச்சினைகளில் தொய்வு உண்டாகாது. அரசாங்க உத்தியோகஸ்தர்கள் மேலதிகாரிகளின் கண்டிப்புக்கு உள்ளாகிப் பின் நிலைமை சீரடையும். விவசாயிகளுக்குவிசேஷ பலன் ஏற்பட இடமில்லை. கலைத்துறையில் சம்பந்தப்பட்ட அனைவருக்குமே சற்று மந்தப் போக்கில் நாட்கள் கழியும். கடிதப் போக்குவரத்தில் நிதானத்தைக் கடைப்பிடிப்பது நல்லது. காதல் விவகாரங்களில் ஈடுபட இது உகந்த நேரம் இல்லை. வியாபாரிகளுக்குப் பிரச்சினை இல்லை. உடல்நலம் சற்றுப் பாதிக்கப்பட காரணமுண்டு. புனித கருமங்களில் ஈடுபட்டு மகிழ்ச்சியடைய இது நல்ல நேரம்.

கடைசி மூன்று பாதங்களில் பிறந்த கன்யாராசிக்காரர்களுக்குக் கோசாரம் பரவாயில்லை. நற்பலன்கள் சற்றுக் கூடுதலாக நடக்க இடமுண்டு. அரசு அலுவலர்களுக்கு உற்சாகம் இருக்கும். அரசாங்க காரியங்களில் மந்தநிலை நீங்கி, சுறுசுறுப்புக் காணலாம். ஜன்ம சனி, குரு இவர்களால் தொல்லைகள் வராதவண்ணம் அக் கிரகங்கள் நட்சத்திர ரீதியாக அனுகூலமாக சஞ்சரித்துக் கொண்டிருக்கின்றன. சனிப்பெயர்ச்சி வரை வம்பு வர இடமில்லை. முதலாளி—தொழிலாளி உறவு சகஜமாக இருக்கும். கலைத்துறையில் சம்பந்தப்பட்ட எழுத்தாளர்கள், கவிஞர்கள், நடிகர்கள் ஆகியோருக்கு ஆதரவான போக்கு உருவாகும். காதல் களியாட்டங்களில் இடையூறு வர இடமில்லை. கற்றறிந்த மேலோர் கௌரவிக்கப்படுவார்கள். வியாபாரிகளுக்கு லாபப்போக்கு உருவாகும். புதிய முயற்சிகளில் தற்போது பிரவேசிக்க வேண்டாம். குடும்பத்தில் சுமுகம் நிலைத்திருக்கும். ஸ்பெகுலேஷன் துறையில் சிறிதளவு ஆதாயம் காணலாம்.

ஜுலை 21, 23, 25, 27, 30, ஆகஸ்டு 5 —நல்ல நாட்கள்.

## ஹஸ்தம் (கன்னி)

பூ - ஷ - ண - ட
P D

நன்மை புரிவதில் சில கிரகங்களின் அனுக்கிரகம் ஏற்பட்டுள்ளது. குறிப்பாகச் சூரியனும் புதனும் சிறப்பாக சஞ்சரித்துக் கொண்டிருக்கிறார்கள். இதனால் உங்கள் கௌரவம் ஓங்க இடமுண்டு. அரசுப் பணியாளர்களுக்கு மாமூல் போக்கில் ஊறு நேராது. தொழிலில் மேன்மையுண்டாகும். பொருளாதார அபிவிருத்திக்கு ஆதரவான சூழ்நிலையும் உருவாகும். 12-ம் இடத்திலுள்ள குருவும், சனியும்கூட நட்சத்திர ரீதியாக சாதகமாக இருப்பதால் அவர்களால் ஏற்படவிருந்த தீய பலன்கள் மட்டுப்படவும் வழி உண்டாகும். இதனால் உங்களுடைய பிரச்சினைகளை நீங்கள் சுலபமாக சமாளிக்கும் ஆற்றலும் ஓங்கும்.

விவசாயிகளுக்கு உசிதமான நேரம் இல்லை. பொறியியல், விஞ்ஞானம் போன்ற துறைகளில் உள்ளவர்களுக்கு இடையூறுகள் ஏற்பட இடமுண்டு. மருத்துவர்கள் கவனத்தோடு பணியாற்றினால் பழிச் சொல்லுக்கு ஆளாகாமல் தப்பிக்கலாம். வித்தைகளில் தேர்ச்சியும், விஷயங்களை அறிவதில் ஆர்வமும் உண்டாகும். வியாபாரிகள் கெட்டிக்காரத்தனமாக நடந்து கொண்டால் இரட்டிப்பு லாபம் பெறவும் வாய்ப்புண்டு. கலைத்துறையில் சம்பந்தப்பட்டவர்களுக்கு மாமூல் போக்கில் குறுக்கீடுகள் உண்டாகாது. காதலர்கள் மேன்மையடைய முடியும். குடும்பத்தில் சுபிட்சம் நிலைக்கும். கணவன்—மனைவியரிடையே அன்பு செழிக்கும். கடிதப் போக்குவரத்தில் உற்சாகமான சூழ்நிலை உருவாகும். புனித காரியங்களைச் செய்து புத்துணர்ச்சிப் பெற இது உகந்த நேரம்.

ஜுலை 22, 24, 26, 28, 29, 31, ஆகஸ்டு 2, நல்ல நாட்கள்.

(33-ம் பக்கம் பார்க்க)

# சாராவளி கூறும் 12 வகைப் புத்திரப் பேறு

சிறப்பான சில ஜோதிட நூல்களில் கல்யாணவர்மன் அவர்களால் இயற்றப் பட்ட 'சாராவளி' என்னும் நூலும் ஒன்றாகும். இந்நூலில் பன்னிரண்டு வகையான புத்திரப்பேற்றினைப் பற்றியும் அப் புத்திரப் பேறு அமைவதற்கான கிரகஅமைப்புகள் பற்றியும் 34-வது அத்தியாத்தில் 26-வது சுலோகம் முதல் 38-வது சுலோகம் முடிய விளக்கியிருக்கிறார். அதன் விவரம் வருமாறு:

1. **ஔரசன்:** தனது இனத்திலேயே தனக்குச் சொந்தமான மனைவியின் வயிற்றில் தனக்குப் பிறந்த புத்திரன்.

இப்படிப்பட்டப் புத்திரனைப் பெறுவதற்குரிய கிரக அமைப்பாவது:

ஜன்ம லக்னம் அல்லது சந்திரன் நின்ற ஜன்மராசி இவற்றுள் எது வலிமையுள்ளதோ அதற்கு 5-ம் இடம் சுபக் கிரகங்களுக்குரிய ராசியாக இருக்க வேண்டும். அந்த வீட்டிற்குக் குருபகவானுடைய சட் வர்க்கப் பலன்களில் ஒன்று அமைந்திருக்க வேண்டும் — இத்தகைய அமைப்பில் பிறக்கும் புத்திரனை 'ஔரசப் புத்திரன்' எனலாம்.

2. **க்ஷேத்திரஜன்:** நோயாளிக் கணவனுடைய மனைவியானவள் தன்னுடைய கணவனின் சம்மதத்தின் பேரில் வேறொரு ஆடவனைக் கூடிப் பெற்றெடுக்கும் புத்திரன்.

இத்தகையப் புத்திரனுக்கான அமைப்பாவது:

புத்திர ஸ்தானமான ஐந்தாமிடம் மகரம் அல்லது கும்பமாகவோ அல்லது சனியின் வர்க்கமாகவோ அமைந்து, சூரியன், செவ்வாய், குரு இவர்களின் பார்வையைப் பெறாமல் புதனுடைய பார்வையை மட்டும் பெற்றிருக்கும் நிலையில் பிறந்தவனை க்ஷேத்திரஜ புத்திரன் எனக் கொள்ளவேண்டும்.

3. **தத்துப்புத்திரன்:** பெற்றோர்களின் சம்மதத்தின் பேரில் அவர்களிடமிருந்து அன்பளிப்புப் போல் மற்றவர்கள் பெற்றுக் கொள்ளும்படியாகக் கிடைத்த புத்திரன்.

5-ம் இடம் மகரம் அல்லது கும்பமாகி அங்கு சனி இருந்திட, அந்தச் சனியைச் சந்திரன் பார்க்கப் பிறந்தவன் தத்துப்புத்திரன் ஆவான்.

4. **கிரீதன்:** தனக்கேற்ற அந்தஸ்தைப் பாராமல் ஒரு குழந்தையை அதனுடைய பெற்றோர்களிடமிருந்து விலை கொடுத்து வாங்குவதன் மூலம் அடையப் பெறும் புத்திரன்.

5-ம் இடம், புதன் வீடாகிய மிதுனமாகவோ கன்னியாகவோ இருந்து, அங்கு புதன் இருந்து, சந்திரன் அந்த புதனைப் பார்க்கும் வண்ணம் பிறந்த புத்திரன், கிரீத புத்திரன் ஆவான்.

5. **கிரித்திரிமன்:** வயது வந்தவுடன் தன் பெற்றோர்களின் சம்மதமில்லாமல் தானாகவே இன்னொருவரிடம் சுவீகாரப் புத்திரனாகச் சென்று அவர்களுக்குப் பிள்ளையாக இருப்பவன்.

மேஷம் அல்லது விருச்சிகம் 7-ம் இடமாக அமைந்திட, சனிபகவான் 5-ம்இடத்தில் இருக்கவேண்டும். அதோடு வேறு எந்தக் கிரகங்களின் பார்வையும் பெறாமலிருக்கப் பிறந்த புத்திரனை கிரித்திரிம புத்திரன் எனலாம்.

6 **அதமப்பிரபாவன்:** ஒரு பிராம்மணனுடன் ஒரு கீழ்க்குல ஜாதிப்பெண் கூடிப் பெற்றெடுத்தப் புத்திரன்.

5-ம் இடமாகச் சிம்மராசி அமைந்து அங்கு செவ்வாயின் பார்வையைப் பெறும் வண்ணம் சூரியன் அமர்ந்திடப் பிறந்தவன், அதமப்பிரபாவ புத்திரன் ஆவான்.

7. **கருடோற்பன்னன்:** கணவனுக்குத் தெரியாமல் ரகசியமாக அந்நிய புருஷனுடன் கூடியதால் பிறந்த புத்திரனாகி தனது கணவன் வீட்டிலேயே வளரும்படி இருக்கப் பெறும் புத்திரன்.

இப்படிப்பட்டப்புத்திரனுக்குரிய கிரக அமைப்பாவது:

மேஷத்திலோ, விருச்சிகத்திலோ உள்ள சந்திரனை வேறு கிரகங்கள் பார்க்காமல் ஐந்தாம் இடத்திலுள்ள சனி மட்டும் பார்க்கப் பிறந்தவன் 'கருடோற்பன்ன' புத்திரன் ஆவான்.

8. **அபவித்தன்:** பெற்றோர்கள் புறக்கணித்து விட்ட பின் பிறரிடத்தில் வளருகின்ற புத்திரன்.

மகரமோ, கும்பமோ ஐந்தாமிடமாக அமைந்திட அங்கு சூரியனுடைய பார்வையைப் பெற்று செவ்வாய் இருக்கப் பிறந்தவன் அபவித்த புத்திரன்.

9. **புவனர்ப்பவன்:** ஒரு புத்திரனோடு உள்ள விதவையை மறுமணம் செய்து கொள்வதால் கிடைக்கும் அந்தப் புத்திரன் புவனர்ப்பவன் எனப்படுவான்.

மகரத்திலோ, கும்பத்திலோ அல்லது சனியின் வேறு வர்க்கங்களிலோ சந்திரன் இருக்க வேண்டும். அதோடு, சூரியன், சுக்ரன் ஆகிய இருவருடைய பார்வைகளைப் பெற்று சனி 5-ம் இடத்தில் இருக்க வேண்டும். இப்படிப்பட்ட அமைப்புள்ள ஜாதகன் புவனர்ப்பவ புத்திரன் ஆவான்.

10. **கானீனன்:** திருமணமாகாத கன்னிப் பெண்ணிற்குப் பிறந்த புத்திரன்.

அஸ்தமனம், நீசம், பகை போன்ற வலிமை இழந்த நிலையில் சந்திரன் இருக்கும் போது, 5-ம் இடத்திற்குச் சூரியனின் சம்பந்தமோ, பார்வையோ அமைந்திடப் பிறந்தவன் கானீன புத்திரன் ஆவான்.

11. **சகோடன்:** ஒரு பெண் கர்ப்பமுற்ற நிலையிலேயே திருமணம் செய்து பெற்றெடுத்த புத்திரன்.

சூரியன், சந்திரன் வர்க்கங்களிலோ அல்லது கடக, சிம்ம ராசியிலோ 5-ம் இடம் அமைந்து, அங்கு சூரியன், சந்திரன் இருந்திட, இவர்களுக்குச் சுக்ரனின் பார்வையும் கிடைக்கப் பெற்ற நிலையில் பிறந்தவன் சகோட புத்திரன் ஆவான்.

12. **தாசிப் பிரபாவன்:** அடிமைத் தொழில் புரியும் பெண் பெற்றெடுத்த புத்திரன்.

சுக்ரனுடைய பார்வையைப் பெற்றுள்ள ராசியே 5-ம் பாவமாகி, அதுவே சுக்ரனுடைய நவாம்சம் பெறும் ராசியாகவும் இருந்திடப் பிறந்தவன் தாசிப்பிரபாவ புத்திரன் ஆவான்.

சாராவளி தவிர வேறு சில நூல்களில், சந்திரனுக்கும், மேற்படி சுக்ரனுக்குரிய அமைப்புக் கிடைத்தாலும் இத்தகையப் புத்திரப்பேறுதான் அமையும் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

**—'சிவசக்திவேலன்'**

---

## காத்தாயி, பிடாரி...

காத்யாயன மகரிஷி ஸாட்சாத் பரமேச்வரியைபெண்ணாக அடைய வேண்டும் என்று தவம் செய்தார். அம்பிகையும் அவருக்கு மகளாகத் தோன்றினாள். காத்யாயனருக்குப் பெண் என்பதனாலேயே அவளுக்குக் காத்யாயனீ என்ற பெயர் ஏற்பட்டது.

குழந்தையாக வந்த காத்யாயனியைத் தமிழ்நாட்டுக் கிராம ஜனங்கள் காத்தாயி என்று அழைக்கிறார்கள்.

பட்டாரிகை என்று பெரிய ஸ்ரீ வித்யோபாஸகர்கள் குறிப்பிடும் அம்பாளைத்தான் கிராம மக்கள் பிடாரி என்று பூஜிக்கிறார்கள். சரஸ்வதியைப் பேச்சாயி என்றழைக்கிறார்கள். பேச்சுக்கு ஆயி பேச்சாயி.

—ஸ்ரீ காஞ்சிப்பெரியவர்

தொகுப்பு : ஜோமணி

---

## சூரிய வணக்கம்

மழை முதலியவற்றால் உலகைக் காக்கின்றவரானச் சூரியனுடைய மண்டலத்தை வணங்குகிறேன்.

சூரிய பகவானே! நீர் எல்லாவற்றையும் நன்கு உணர்ந்து எல்லாரையும் அவரவருக்கு ஏற்ற காரியத்தில் தூண்டுகிறீர். மக்கள் செய்யும் புண்ணிய பாப கர்மாக்களை நேராகப் பார்க்கிறீர். சத்ய ஸ்வரூபியான உமக்கு நெய்யுடன் ஹவியைத் தருகிறோம். முறைப்படி உமக்கு ஹவியைத் தருபவன் அன்ன பானங்களுக்குக் கஷ்டப்படமாட்டான். நீண்டநாள் வாழ்வான். இப்போதோ முன்பிறவியிலோ செய்த பாபம் அவனை அணுகாது.

—ஸந்தியாவந்தனம்

தொகுப்பு : வெங்கடராம சாஸ்திரி



# பகவான்

இந்திராதேவி தனது சகோதரியின் மகனையும், மருமகளையும் அழைத்துக் கொண்டு இந்தியாவுக்கு வந்திருந் தார். புட்டபர்த்தியில் பகவான் பாபா வின் தரிசனத்துக்காக வந்து காத்திருந் தார்.

பில்—எக்ஸ் என்ற அந்த வாலிபனிடம் ''உனக்கு என்ன வேண்டும்? நீ ஒரு கத்தோலிக்க கிறிஸ்துவர் அல்லவா?'' என்று கேட்டார் பாபா. பாபாவின் முன் பிரமித்து நின்ற பில், எதுவும் சொல்லவில்லை. பாபா அவனுக்கு அருட் பிரசாதமாக மலர்களை வழங்கினர். அவற்றின் நடுவே புனிதச் சிலுவை இருந்தது! அவனுடைய மனைவி எதை யும் குறிப்பிடவில்லை. ஆயினும் அவ ளுக்கும் பிரசாதம் கிடைத்தது. கை விரல்களைப் பிரித்துப் பார்த்தபோது ங்கே பாபாவின் உருவ அடையாளம் ாண்ட பதக்கம் ஒன்று இருந்தது. ள் விரும்பியதும் அதைத்தான்!

இந்திராதேவி தனது அறையில் பிரார்த்தனை செய்வார். பஜனைகள் நடத்துவார். ஆனல், எதையும் அவர் புட்டபர்த்தியில் வந்து இருந்து கற்றுக் கொண்டதில்லை. அவை அவருக்கு இயல் பாக வந்தவை. இரத்தத்தில் ஊறிப் போனவை. இந்திராதேவி அப்படிச் செய்வதைப் பார்த்துவிட்டு மானேஜர் கஸ்தூரி, அவரிடம் ''எப்போது இவற் றைக் கற்றுக் கொண்டீர்கள்? யார் சொல்லிக் கொடுத்தார்கள்?'' என்று கேட்டார்.

''யாரும் சொல்லிக் கொடுக்கவில்லை! கிறிஸ்துவ மதத்தைச் சேர்ந்தவளானு லும் பகவானை எந்த விதமாகவும் பிரார்த்திக்கலாம் என்பதை உணர்ந் தேன். அவ்வளவுதான்! இந்த உணர்ச் சியை என் மனத்திற் தோற்றுவித்து அருளியவர் பகவான் சத்யசாயிதான்'' என்று பதில் சொன்னுர் இந்திராதேவி.

பாபா, அவரை முன்பின் பார்த்திரா தவர்களுக்கும் அருளுகிறுர். அந்த அருள் எவ்வளவு தூரத்தில் இருந் தாலும் கிடைக்கிறது. மகாராணி பல்பீர் கௌரின் அனுபவம் அதற்கு ஓர் உதாரணம். மகாராணி பல்பீருக் குப் புற்றுநோய் உண்டாயிற்று. சிகிச் சைக்காக அமெரிக்காவுக்கு அழைத்துச்

செல்லப்பட்டார். அங்கு இரண்டு தடவைகள் அறுவை சிகிச்சை செய்தார்கள். இரண்டாவது தடவை அறுவை சிகிச்சை செய்த பிறகு புண் ஆறவில்லை. தொடர்ந்து இரத்தம் வடிந்து கொண்டிருந்தது. அந்தநிலையிலேயே மூன்றாவது அறுவை சிகிச்சை செய்ய வேண்டிய. அவசியமும் ஏற்பட்டது.

டாக்டர்களுக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. ''இந்த நிலையில் மூன்றாவது அறுவை சிகிச்சை செய்வது முடியாத காரியம். ஆனால், அதைச் செய்யாவிட்டாலும் அவர் பிழைக்க மாட்டார். எங்களுக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை!'' என்று அமெரிக்க டாக்டர்கள் சொல்லிவிட்டார்கள். பல்பீர் கௌர் பாபாவைத் தரிசித்ததில்லை. பத்திரிகையில் வெளி வந்த புகைப்படம் ஒன்றை மட்டும் கத்தரித்து வைத்திருந்தார். அதை எடுத்துத் தன் முன் வைத்துக் கொண்டார் மகாராணி பல்பீர். நினைவிழக்கக்

# பாபா..

கூடிய அந்த சூழ்நிலையிலும் பிரார்த்தனையைத் தொடங்கினர்.

இரண்டு மணி நேரத்தில் புண்ணில் வழிந்த இரத்தம் நின்றுவிட்டது. எக்ஸ்-ரே எடுத்துப் பார்த்தபோது இன்னொரு அறுவை சிகிச்சைக்கு அவசியம் இல்லை என்று ஆகிவிட்டது. டாக்டர்களுக்கு, இந்த மாறுதலின் காரணம் ஏதும் புரியவில்லை. ''பாபா என்னைக் காப்பாற்றிவிட்டார்!'' என்று கண்களில் நீர் மல்க மகாராணி கூறிய போது அந்த அதிசயமும் ஓர் அருள் பிரசாதம் என்பதை மட்டும் அவர்களால் உணர முடிந்தது...

மகாராணி பல்பீர் இந்தியாவுக்குத் திரும்பினர். அவருடைய பேத்தி (மகளின் மகள்) ரத்தன் என்ற பெண்ணுக்குத் திருமணம் ஆகவேண்டி இருந்தது. அவளை அழைத்துக் கொண்டு, பகவான் பாபாவிடம் ஆசிகள் வேண்டி வந்தார் பல்பீர். பாபா அவர்களுக்குத் தரிசனம் அளித்தபோது ரத்தனிடம் தனது கையெழுத்திட்டப் புகைப்படம் ஒன்றைக் கொடுத்தார். ''உன் கணவர் பெயர் என்ன?'' என்று கேட்டார். ரத்தன் தன்னை மணக்கப் போகும் வாலிபனின் பெயரைச் சொன்னாள்.

''உனக்கு இன்னும் கல்யாணமே ஆகவில்லையே? அந்த வாலிபன் எப்படி உன் கணவனாக முடியும்?'' என்று வேடிக்கையாகக் கேட்டார் பாபா. அவள் முகம் சிவந்து போயிற்று. ''உனக்குத் திருமணம் நடக்கப் போகிறது என்பது எனக்குத் தெரியும். உனக்கு தந்தை இல்லை. அப்படித்தானே?'' என்று கேட்டார் பாபா. அது உண்மைதான். ஆனால், அது அவருக்கு எப்படித் தெரியும் என்பது அவளுக்கு வியப்பாக இருந்தது. ''உன் தந்தையின் ஸ்தானத்தில் இருந்து இதை என் திருமணப் பரிசாகக் கொடுக்கிறேன்!'' என்று சொல்லித் தனது கையை உயர்த்தி ஆசீர்வதித்தார் பகவான் பாபா. கண்ணைப் பறிக்கும் வைரங்களும் அழகான நல் முத்துக்களும் கொண்ட மாலை ஒன்று ரத்தனின் கையில் விழுந்தது! எங்கிருந்து வந்தது இந்த ஹாரம்? தேடினாலும் கிடைக்காத, விலைகொடுத்து வாங்கமுடியாத அந்த வைரங்கள் எங்கிருந்து வந்தன? ஏதும் சொல்ல முடியாமல் கண்ணீர் பெருக நின்றுவிட்டாள் அந்த இளம்பெண். எல்லாரும் பிரமித்துப் போய்விட்டார்கள்.

''என்னாலேயே இவ்வளவு விலையுயர்ந்த பரிசைக் கொடுத்திருக்க முடியாது!''என்றாள் மகாராணி பல்பீர். பாபா புன்னகையுடன் ஆசீர்வதித்து விட்டுப் போய் விட்டார். வரும் வழியில் அந்த மாலையில் ஒரு பெரிய முத்து இடம் நழுவி மறைந்துவிட்டது. மகாராணி திரும்பிப் போய் பாபாவிடம் கேட்டார். ''பரவாயில்லை! அது இல்லாமலே இந்த மாலை அழகாக இருக்கிறது!'' என்று சொல்லி அனுப்பிவிட்டார் பாபா.

இந்திரா தேவியிடம் வந்து மாலையைக் காட்டிக் கேட்டாள் மகாராணி பல்பீர். ''அந்தப் பிரசாதத்தை விலையுயர்ந்த பரிசு என்று சொன்னீர்கள் அல்லவா? அதுதான் காரணம்!'' என்றார் இந்திரா தேவி. ''ஏன் அப்படிச் சொல்லுகிறீர்கள்?'' என்று கேட்டாள் பல்பீர்.

''பகவான் பாபா ஒரு பக்தருக்கு ஷிர்டிபாபாவின் உருவம் பதித்த தங்கப்

## எஸ். லட்சுமிசுப்பிரமணியம்

பதக்கம் கொண்ட, தங்கச் சங்கிலி ஒன்றைக் கொடுத்தார். அதைப் பெற்றுக் கொண்ட பக்தர், திரும்பி வரும் வழியெல்லாம் அதன் விலை மதிப்பு, எவ்வளவு இருக்கலாம் என்று எண்ணிக் கொண்டே வந்தார். வீட்டுக்கு வந்து பெட்டியில் அதை வைத்துப் பத்திரமாகப் பூட்டினார். காலையில் எழுந்து பார்த்தபோது மாலையைக் காணவில்லை. பாபாவிடம் ஓடிப்போய்க் கேட்டார். 'தாங்கள் எனக்குக் கொடுத்த தங்கச் சங்கிலி தொலைந்து போய்விட்டதே?' என்று புலம்பினார்.

'நீ அதைத் தொலைக்கவில்லை! நான் தான் திரும்ப எடுத்துக் கொண்டுவிட்டேன். அது, அருட்பிரசாதமாக உன் கண்களுக்குப் படவில்லை. வெறும் தங்கச் சங்கிலியாகத்தான் தோன்றிற்று. அதற்கு விலை மதிப்புப் போடத் தொடங்கி விட்டாய். அதற்குப் பின் அது உன்னிடம் இருப்பதில் அர்த்தம் இல்லை என்று நான் திரும்ப எடுத்துக் கொண்டு விட்டேன்!' என்றார் பகவான் பாபா. தன்னுடைய அற்ப ஆசையை பாபா புரிந்து கொண்டு, அதற்குரிய தண்டனையையும் கொடுத்துவிட்டார் என்பதைப் பக்தர் உணர்ந்து கொண்டார். காலில் விழுந்து புலம்பி மன்னிப்புக் கேட்டுக் கொண்டார்!'' என்று அந்தக் கதையைச் சொல்லி முடித்தார் இந்திராதேவி.

''என் பேத்தியின் மாலையில் ஒரு நல்முத்து மறைந்ததற்கும் அதுதான் காரணமா?'' என்று கேட்டார் பல்பீர்.

''ஆமாம்! 'விலையுயர்ந்த' என்று ஒரு தடவை சொன்னீர்கள் அல்லவா?'' என்று கூறிச் சிரித்தார், இந்திராதேவி.

புட்டபர்த்தி ஆசிரமத்தில் மகாசிவராத்திரி போன்ற புண்ணிய தினங்களில் பல்லாயிரக் கணக்கான மக்கள் கூடுவார்கள். இரவு முழுவதும் பட்டினி கிடந்து விரதம் அனுஷ்டிப்பார்கள். கண்ணயராமல் இரவு முழுவதும் பஜனை நடக்கும். மறுநாள் மகா சமாராதனை நடைபெறும். சக்கரைப் பொங்கலும், வெண்பொங்கலும், கறிகாய் வகைகளும் அனைவருக்கும் கிடைக்கும்.

''ஆசிரமத்துக்கு வந்திருப்பவர்கள் முப்பதனாயிரம் பேருக்கு மேல் இருப்பார்கள் போலிருக்கிறதே? அவ்வளவு பேருக்கும் எப்படிச் சமையல் செய்ய முடிகிறது?'' என்று அந்த மடைப்பள்ளியில் பணிபுரிந்த சமையற்காரர் ஒருவரிடம் கேட்டார் இந்திராதேவி.

''எங்களால் முடிந்தவரையில் சமைக்கிறோம். சமையல் தயாரானதும் பகவான் பாபாவிடம் போய்ச் சொல்லுவோம். அவர் இங்கே வந்து இந்தப் பாத்திரங்களைத் தமது விரல்களால் தொட்டு ஆசீர்வதிப்பார். 'எல்லாருக்கும் உணவு கிடைத்து முடியும் வரை இந்தப் பாத்திரங்கள் காலியாகாது!' என்று ஆசி கூறுவார். அப்புறம் நாங்கள் பரிமாற ஆரம்பிப்போம்'' என்றார் அந்த சமையற்காரர்.

''உணவுப் பொருட்கள் தீருவதே இல்லையா? கடைசியாக நிற்பவர்வரையில் எல்லாருக்கும் கிடைக்குமா? எப்படி அது முடிகிறது?'' என்று கேட்டார் இந்திராதேவி.

''ஐந்து ரொட்டித் துண்டுகளை வைத்துக் கொண்டு அனைவருக்கும் போஜனம் செய்துவைக்க ஏசுகிறிஸ்து அருள் செய்யவில்லையா?'' என்று கேட்டார் அருகில் நின்றிருந்த தொண்டர்.

(21-ம் பக்கத் தொடர்ச்சி)

குடும்பபாரத்தையும் சுமக்கப்போகிறான். தொடர்ந்து பன்னிரண்டு ஆண்டுகளுக்கு உடல் ஆரோக்கியம் இல்லாவிட்டாலும் குடும்பத்துக்காக ஓடியாடித் திரிந்து நாய்ப் பிழைப்பு பிழைக்கப்போகிறான். அடுத்த இருபது ஆண்டுகளுக்கு அவனை யாரும் கவனிக்க மாட்டார்கள். குடும்பத்தில் ஒவ்வொரு இடமாக, மகனையும், மகளையும், உறவினர்களையும், நண்பர்களையும் நாடி, உதவி தேடி கிளைக்குக் கிளை குரங்கைப்போலத் தாவிக் கொண்டிருப்பான்! அப்புறம் தான் அவனுக்கு விடுதலை கிடைக்கும்!'' என்றார் பகவான்.

''ஆண்டவனே! அப்போது அவன் கதிதான் என்ன?'' என்று கேட்டார் நாரதர்.

''கவலைப்படாதே நாரதா! அவனுக்கு ஆறும் அறிவைக் கொடுத்திருக்கிறேன் – அதை உபயோகித்து அவன் நல்லவனாகக் கடவுள் பக்தியுடன் வாழ்ந்தால் பிழைத்துக் கொள்வான்!'' என்று கூறிச் சிரித்தார் பகவான்.

தொகுப்பு: **செல்வி**

(27-ம் பக்கத் தொடர்ச்சி)

## சித்திரை 1, 2-ம் பாதங்கள் (கன்னி) 3,4-ம் பாதங்கள் (துலாம்)

பே போ - ரா - ரி
P P

மூன்னிரண்டு பாதங்களில் பிறந்த கன்யா ராசிக்காரர்களுக்கு நற்பலன்கள் சற்று கூடுதலாக நடக்க வாய்ப்புண்டு. அரசுப் பணியாளர்களுக்கு மேலதிகாரிகளின் கருணைப் பார்வைப் பெறவும் வாய்ப்புண்டு. செய் தொழிலில் மேன்மையும், தெய்வப்பணிகளில் ஆர்வமும் உண்டாகும். ஆசிரியர்—மாணவர் உறவில் கண்ணியம் ஓங்கும். கல்விப்பயனைப் பெறுவதிலும், வித்தைகளில் தேர்ச்சியும் உண்டாகும். பெரும் வியாபாரத்தில் சம்பந்தமுள்ள உள்ளூர், வெளியூர் வியாபாரிகளுக்கு லாபகரமானப் போக்கு உருவாகக் கூடிய நல்ல நேரம் இது. பயணம் ஒன்றை மேற்கொள்ள நேரலாம். அதனுல் பயனும் உண்டாகலாம். விவசாயிகளுக்கு உசிதமில்லை. பொறியியல் துறையில் உள்ளவர்கள் பொறுப்போடு நடந்துகொண்டால் இழிவு வராது. மருத்துவர்கள் எச்சரிக்கையாக இருப்பது நல்லது. கலைத்துறையில் சிறப்பு உண்டாக இடமுண்டு. குடும்பத்தில் குதூகலம் நிறைந்திருக்கும்.

கடைசி இரண்டு பாதங்களில் பிறந்த துலாராசிக்காரர்களுக்கு உன்னதமான நேரம் நடந்து கொண்டிருக்கிறது. உங்கள் எதிர்கால நல்வாழ்வுக்கான அடிப்படை முயற்சிகளை இந்த நேரத்தில் தொடங்கலாம். அரசுப்பணியாளர்களுக்கு உற்சாகமான சூழ்நிலை உருவாகும். இந்த நேரத்தில் முயற்சி செய்தால் நற்பலன் விளைய இடமுண்டு. கற்றறிந்த மேலோர் கௌரவிக்கப்படுவார்கள். அரசாங்க மரியாதை சிலருக்குக் கிடைக்கவும் வாய்ப்புண்டு. தொழிலில் மேன்மையும், தருமப்பணிகளில் ஆர்வமும், தெய்வத் தொண்டில் ஈடுபாடும் மேலோங்கக் கூடிய புனித நேரம் இது. கலைத்துறையில் சம்பந்தப்பட்ட எல்லாருக்குமே ஒரு ஏற்றம் ஏற்பட சூழ்நிலை கனிந்து வரும். காதல் களியாட்டங்களில் மூழ்கி இருக்கும் காதலர்கள் தங்களுடைய காதலைப் பெற்றோருக்குத் தெரிவித்து திருமண முயற்சியில் ஈடுபட இது உகந்த நேரம். வியாபாரிகளுக்கு லாபகரமான போக்கில் இடையூறு ஏற்பட இடமுண்டு.

## உத்தம புத்தியின் லட்சணங்கள்

பிறர் சொன்ன அர்த்தத்தை மனதில் வாங்கிக் கொள்வது, அதை நினைவில் வைத்துக் கொள்வது, தகுதியான வார்த்தைகளால் பிறருக்குச் சொல்வது, பிறருடைய கருத்தை ஊகித்தறிவது, அதற்கு உடனே பதில் சொல்வது, வார்த்தைகளின் உட்கருத்தை அறிவது, பதார்த்தங்களின் உண்மையான ஸ்வரூபத்தை அறிவது ஆகியவை உத்தம புத்தியின் லட்சணங்கள்.

—ராமாயணம்

தொகுப்பு : பைங்காநாடு

முதலாளி — தொழிலாளி உறவில் இணக்கம் உண்டாக வாய்ப்புண்டு. குடும்பத்தில் சுபிட்சம் நிறைந்திருக்கும்.

ஜுலை 21, 23, 25, 27, 29, ஆகஸ்டு 1, நல்ல நாட்கள்.

## சுவாதி (துலாம்)

ரு—ரே—ரோ—தா

அந்தஸ்து, பொருளாதாரம், மனவளம் ஆகிய பாக்கியங்களைப் பெறக் கூடிய வகைகளில் கிரகசஞ்சாரம் நடந்து கொண்டிருக்கிறது. பதவி உயர்வுப் பெறத் தகுதிவாய்ந்தவர்களுக்கு அத்தகைய வாய்ப்பு கிட்ட இடமுண்டு. கல்வித்துறையில் சம்பந்தப்பட்ட விற்பன்னர்கள் கௌரவிக்கப் படுவார்கள். தொழில்துறையில் சம்பந்தப்பட்டவர்களுக்கு லாபகரமானப் போக்கு தென்படும். வியாபாரத்துறையில் ஈடுபட்டுள்ளவர்களுக்கு மிகுந்த பிரயாசையின் பேரிலேயே லாபத்தைக் காண வேண்டிவரும். விவசாயிகளுக்கு வம்பு ஒன்று உண்டாகிப் பின் அது மறையும். அவசரப்பட்டு ஒரு காரியத்தில் இறங்கிப் பின் அவதிக்கு உள்ளாக ஒரு அமைப்பு காரணமாவதால் அமைதி காப்பது நல்லது.

மருத்துவம், பொறியியல், விஞ்ஞானம், கணிதம் போன்ற இனங்களில் உள்ளவர்கள் பொறுப்போடு

நடந்து கொண்டால் பழி வந்து சேராது. கடிதப் போக்கு வரத்தில் கண்ணியத் தைத் தவற விடாதீர்கள். பயணம் செய்வதைத் தவிர்ப்பது நல்லது. முன் விரோதம் காரணமாக ஒரு வம்பு வந்து சேரலாம். ஆனுல், அதனை உங்கள் அறிவாற்றலால் வெற்றிக் கொள்வதும், சுலபமாக இருக்கும். வேலை தேடிக் கொண்டிருப்பவர்களுக்கு அதற்கான சூழ்நிலை உருவாகும். திருமணமாகாதவர்களுக்கு அதற்கான சூழ்நிலை கனிந்து வரும். கலைத்துறையில் சம்பந்தப்பட்ட எல்லாருக்குமே முன்னேற்றமான காரியங்கள் நடக்க இடமுண்டு. குடும்பத்தில் சுபிட்சம் தாண்டவமாடும். கணவன் — மனைவியரிடையே களிப்பு பொங்கும். ஸ்பெகுலேஷன் துறையில் ஈடுபட வேண்டாம்.

ஜூலை 22, 24, 26, 28, 29. ஆகஸ்ட் 2, 4, — நல்ல நாட்கள்.

## விசாகம் 1,2, 3 - பாதங்கள் (துலாம்) 4-ம் பாதம் (விருச்சிகம்)

**தி - து - தே - தோ ('Th'வரிசை)**

மூன் மூன்று பாதங்களில் பிறந்த துலா ராசிக்காரர்களுக்குக் கோசாரம் நல்லவிதமாக அமைந்திருக்கிறது. உங்கள் அந்தஸ்து உயரும். பொருளாதார சுபிட்சம் விருத்தியாகும். புனித கருமங்களிலும், தெய்வப்பணிகளிலும் ஈடுபட்டு உண்டாகி உள்ளப் நெம்பனடையும். அரசுப் பணியாளர்களுக்கு மேலதிகாரிகளின் ஆதரவு கிட்டும். தொழிலில் மேன்மையுண்டாகும். உற்றார் வருகையும் அதனுல் ஒரு நன்மையும் உண்டாக இடமுண்டு. அலைச்சல் தவிர்க்க முடியாததாக இருக்கும். அதனுல் உடல்நிலை சற்று பாதிக்கப்படவும் செய்யும். நட்சத்திர ரீதியாக குரு சற்று பலவீனப்பட்டிருப்பதால் தட்சிணமூர்த்தி தெய்வத்தைத் தொழுது வாருங்கள். நலம் விளையும். கலைத்துறையில் உள்ளவர்கள் பிரகாசிப்பார்கள். குடும்பத்தில் குதூகலம் நிறைந்திருக்கும்.

கடைசி பாதத்தில் பிறந்த விருச்சிக ராசிக்காரர்களுக்கு மிதுனத்தில் உள்ள புதனுல் சில அனுகூலங்கள் ஏற்படவும் இடமுண்டு. சனி நட்சத்திர ரீதியாக சாதகமாக சஞ்சரித்துக் கொண்டிருப்பது விசேஷம். பொதுவாக நற்பலன்கள் ஓரளவுக்கு நடைபெற இடமுண்டு. தீயபலன்கள் சிலவற்றை எதிர்நோக்க வேண்டியிருக்கும். என்றுலும் அவற்றை உங்களுடைய புத்திசாலித்தனத்தால் சமாளிக்கவும் முடியும். அரசுப்பணியாளர்களுக்குச் சோதனை ஒன்று ஏற்படலாம். துணிச்சலாக எந்தக் காரியத்திலும் தற்போது ஈடுபட வேண்டாம். விவசாயிகளுக்குப் பிரச்சினை இல்லை. வியாபாரிகளுக்கு அளவான லாபம் இருந்துவரும். கலைத்துறையில் உள்ளவர்களுக்கு மந்தப்போக்கு இருக்கும். குடும்பத்தில் சச்சரவு வராமல் பார்த்துக் கொள்ளுங்கள்.

ஜூலை 21, 23, 25, 27, 28, 30, ஆகஸ்ட் 1, 3—நல்ல நாட்கள்.

## அனுஷம் (விருச்சிகம்)

**ந - நி - நு - நே**

கோசாரம் சுமார்தான். பத்தாம் இடத்தில் உள்ள குரு நட்சத்திர ரீதியாக அனுகூலமாக இருப்பதால் அவரால் எந்தத் தீமையும் விளைய இடமிருக்காது. புதனும், செவ்வாயும் உங்களுக்கு நிச்சயம் சில நன்மைகள் உண்டாக உதவக்கூடும். அரசு அலுவலர்கள் பணிமனைகளில் பக்குவமாக இருந்துவிடுவது நல்லது. அன்றுடப் பிரச்சினைகளில் எந்தவிதமான இடையூறுகளும் விளைய இடமில்லை. அரசும் பக்கத்தில் உள்ளோரிடம் சாதுர்யமாக நடந்து கொண்டால் சச்சரவைத் தவிர்க்கலாம். முதலாளி — தொழிலாளி இடையே ஒரு சிறு சச்சரவுக்கு இடமுண்டு. பொறியியல், விஞ்ஞானம், கணிதம் போன்ற துறைகளில் உள்ளவர்களுக்கு உற்சாகப் போக்கு இருக்கும்.

விவசாயிகளுக்கு மகிழ்ச்சியான நேரமாக இருக்கும். வித்தைகளில் தேர்ச்சியும், கல்வி கற்பதில் உற்சாகமும் உண்டாகும். வியாபாரிகளுக்கு லாபகரமானப்போக்கு உருவாகும். பெரியோர் அபவாதத்துக்கு ஆளாகாமல் பார்த்துக் கொள்ளுங்கள். குருப்பிரீதியாகச் சான்றோரை அண்டி அவர்களுடைய ஆசியைப் பெறுவதில் கருத்தாய் இருந்தால் தொல்லைகள் தொலைந்துபோக வழி உண்டாகும். வேதாந்த சிந்தனையில் சிலர் ஈடுபட்டு இன்பம் காண இயலும். குடும்பத்தில் சிறு சச்சரவு முளைக்கலாம். காதலர்கள் தங்கள் களியாட்டங்களை நிறுத்திவைப்பது நல்லது. பயணம் செய்ய வேண்டாம். உடல்நலம் பாதிக்கப்படவும் இடமுண்டு.

ஜூலை 22, 24, 26, 28, 29, ஆகஸ்டு 2, 4 —நல்ல நாட்கள்.

## கேட்டை (விருச்சிகம்)

**நோ-ா--யீ-யு**

சில கிரகங்கள் சாதகமாகவும் சில கிரகங்கள் பாதகமாகவும் சஞ்சரித்துக் கொண்டிருக்கின்றன. குருவருள் குறைந்திருப்பதால் சில இடையூறுகள் ஏற்படவே செய்யும். குருப்பிரீதியாக வேதம் அறிந்த விற்பன்னர்களை வரவழைத்து அவர்கள் உள்ளம் குளிர உணவிட்டு மகிழுங்கள். இதனால் தீய பலன்கள் குறைந்து நற்பலன்கள் ஏற்பட இடமுண்டாகும். அரசாங்கப் பணியாளர்களுக்கு மேலதிகாரிகளின் கண்டிப்பு மிகுந்து இருக்கும். ஆசிரியர் மாணவர் உறவில் சலசலப்புக்கு இடமுண்டு. கடிதப் போக்குவரத்தில் மனக்கஷ்டம் உண்டாக இடமுண்டு. பயணத்தைத் தவிர்ப்பது நல்லது.

வியாபாரிகளுக்கு அளவான லாபம் இருந்து வரும். வெளிநாட்டுத் தொடர்புடைய வணிகர்களுக்கு எச்சரிக்கைத் தேவை. விவசாயப் பணிகளில் சுறுசுறுப்பு காணப்படும். வீடு, நிலம் போன்ற இனங்களில் வில்லங்கம் இருந்தால் அதனைத் தற்போது தீர்த்துக் கொள்வதில் முனைய வேண்டாம். மருத்துவர்களுக்குப் புகழ் தரக்கூடிய ஒரு வாய்ப்பு உண்டாகும். அதனை வெற்றிகரமாக நிறைவேற்றுவதில் இடையூறு ஏற்படவும் இடமுண்டு. முதலாளி—தொழிலாளி உறவில் உள்ள இணக்கத்துக்கு ஒரு சோதனை ஏற்படும். காதல் விவகாரங்களில் தலையிட வேண்டாம். குடும்பத்தில் சிறு சச்சரவுக்கு இடமேற்படும். கலைத்துறையில் சம்பந்தப்பட்டவர் அனைவருக்குமே ஒரு மந்தநிலை உண்டாகும்.

ஜூலை 21, 23, 25, 27, 28, 30, ஆகஸ்ட் 1, 3, 5 —நல்ல நாட்கள்.

### சூரியனைச் சுற்றி

சூரியனைச் சுற்றி இரண்டு மண்டலங்களிருந்தால் சைன்யங்கள் நாசமடையும். மூன்று மண்டலங்களிருந்தால் அரசர்கள் மடிவார்கள். முதல் ஜாமத்தில் சூரியனைச் சுற்றி மண்டலம் காணப்பட்டால் பீடை. இரண்டாவது ஜாமத்தில் காணப்பட்டால் மழையும் யுத்தமும். மூன்றாவது ஜாமத்தில் க்ஷேமம். நான்காவது ஜாமத்தில் ஸகல நாசமும் நேரும்.

—காச்யபர்

**தொகுப்பு : ஆர். வெ.**

## மூலம் (தனுசு)

**யே—யோ—பா—பீ**
**B B**

குருவைத் தவிர மற்ற கிரகங்களின் உலா உவப்பாக இல்லை. இந்தப் பதினைந்து நாட்களில் பலவிதமான விரும்பத்தகாத அனுபவங்களை ஏற்கவேண்டி இருக்கும். அரசுப் பணியாளர்களுக்குப் பிரச்சினை எதுவும் உருவாகாது. அன்றாடப் பணிகளில் குந்தகம் விளையாது. தொழிலில் தொய்வு உண்டாகாது. பொருளாதார நிலையில் சரிவு உண்டாகாது என்றாலும் ஒவ்வொரு நாளையும் கடப்பதில் சங்கடம் இருந்துவரும். மனோதிடம் குறைந்து சஞ்சலநிலை ஏற்படலாம். செந்தில் ஆண்டவனைத் தொழுதுவந்தால் தைரியம் வளரும்.

வியாபாரிகளுக்கு நஷ்டம் வராமல் இருந்தாலே போதும் என்ற நிலைதான். பெரிய முதலீடு புரிந்து செய்யும் வியாபாரிகளுக்குச் சோதனை வர இடமுண்டு. நிறுவன நிர்வாகப் பொறுப்பிலுள்ளவர்களுக்கு எதிர்பாராத வகைகளில் சங்கடங்கள் உருவாகவும் இடமுண்டு. தொழிலாளர்கள் தங்களுடைய பணிக்காலத்தில் எச்சரிக்கையுடன் இருந்தால் விபத்தைத் தவிர்க்கலாம். குடும்பத்தில் சச்சரவுக்கு காரணமுண்டு. காதலர்களுக்கு அபவாதம் ஏற்படவும் இடமுண்டு. கணவன் மனைவியரிடையே கருத்துவேற்றுமை வரலாம். கலைத்துறையில் உள்ளவர்கள் சோதனைக்கு உள்ளாவார்கள். தசாபுக்தி அந்தரங்கள் சாதகமாக இருப்பவர்களை இந்த கோசாரப்பலன் பெரிதும் பாதிக்காது என்பதை மறக்கவேண்டாம்.

ஜூலை 22, 24, 26, 27, 29 ஆகஸ்ட் 2, 4, நல்ல நாட்கள்.

## பூராடம் (தனுசு)

**பூ—த—ப—ட**
**D B B D**

நேரம் சாதகமாக இல்லை என்றாலும் குருவின் இருப்பிடம் நல்ல இடமாக

இருப்பதால் கௌரவம் காக்கப்படும். அரசு அலுவலர்கள் மாமூல் பணிகளைச் செய்து வந்தாலே போதும். அரசாங்கக் காரியங்களில் தாமதம் தவிர்க்க முடியாததாகவே இருக்கும். விவசாயி களுக்கு வில்லங்கம் ஏற்பட இடமுண்டு. பொறியியல், விஞ்ஞானம், கணிதம் போன்ற துறைகளில் உள்ளவர்கள் புதிய முயற்சிகளில் பிரவேசிக்க வேண் டாம். முன் விரோதம் ஒன்று இப்போது முளைத்து தொல்லை தரலாம். குருப் பிரீதி யாகச் சான்றோர் ஆசியையும் ஆலோசனை யையும் பெற்று வந்தால் தொல்லைகளைச் சமாளிக்க வழி புலப்படும்.

உடல் நிலை பாதிக்கப்படலாம். அதனால் பொருள் செலவு சற்று மிகை யாக இருக்கவும் நேரலாம். கலைத் துறையில் உள்ளவர்களுக்கு மாமூல்வேலை சரிவர நடந்தாலே போதும் என்ற நிலை தான். காதலர்களுக்குச் சோதனை ஏற்பட இடமுண்டு. குடும்பத்தில் பிள்ளைகளை முன்னிட்டு அல்லல்படவும் ஓர் அமைப்பு காரணமாகிறது. தம்பதியரிடையே கருத்து வேற்றுமை வரவும் இடமுண்டு. இப்படிப்பட்ட சூழ்நிலையில் மனம் தளர்ச்சி அடைய இடமேற்படுமாதலால், வெற்றிவேல் முருகனை ஆராதித்து வந்தால் மனோ தைரியமும், வேதனைகளை வெற்றி கொள்ளும் திறனும் ஏற்படும். பயணத் தைத் தவிர்ப்பது நல்லது. ஸ்பெகு லேஷன் துறைகளில் ஈடுபட வேண்டாம்.

ஜூலை 21, 23, 25, 27, 8, 30 ஆகஸ்ட் 1, 3, 5 —நல்ல நாட்கள்.

## உத்திராடம் 1-ம் பாதம் (தனுசு) 2, 3, 4-ம் பாதங்கள் (மகரம்)

பே—போ—ஜா—ஜீ
B B

முதல் பாதத்தில் பிறந்த தனுசு ராசிக்காரர்களுக்கு ராசிநாதன் குரு நல்ல இடத்தில் இருப்பது விசேஷம். 10-ம் இடத்தில் உள்ள செவ்வாயும் நட்சத்திர ரீதியாக அனுகூலமாக இருப்பது ஆறுதல் அளிக்கும் விஷய மாகும். இதனால் உங்கள் அந்தஸ்துக்கு குறைவராது. ஆனால், சிரமங்களைச் சந்திக்க வேண்டியேயிருக்கும். அரசுப் பணியாளர்களுக்குப் பரவாயில்லை. தொழிலில் சிக்கல் வரவும் இடமில்லை. வியாபாரிகளுக்கு நஷ்டப் போக்கு இருக்கவே செய்யும். கல்விப்பயனை முழுவதும் பெற முடியாதபடி குறுக் கீடுகள் உண்டாகும். கடிதப் போக்கு வரத்து சுவை தராது. கலைத்துறை யில் உள்ளவர்களுக்கு மந்தநிலைதான் உண்டாகும். பயணத்தைத் தவிர்ப்பது நல்லது. காதலில் தோல்விக்கு இட முண்டு. குடும்பத்தில் சச்சரவு வராமல் பார்த்துக் கொள்ளுங்கள்.

பின் மூன்று பாதங்களில் பிறந்த மகர ராசிக்காரர்களுக்கு விசேஷபலன் ஏற்பட இந்தப் பதினைந்து நாட்களில் வழி இல்லை என்றாலும் சுக்ரனும், புதனும் நல்லவிதமாக தற்போது சஞ்சரித்துக் கொண்டிருக்கிறார்கள். உங்களுடைய அறிவுத்திறனால் நீங்கள் எதையும் சமாளித்துவிட வழியுண்டு. அரசு அலுவலர்களுக்கு மேலதிகாரிகளின் கண்டிப்பு இருந்தவண்ணம் இருக்கும். அரசாங்கப் பணிகளில் தாமதம் தவிர்க்க முடியாமற் போகும். செவ் வாய் நட்சத்திர ரீதியாக சாதகமாக இருப்பதால் தீய பலன்கள் பெரிதும் பாதிக்க முடியாத் நிலை உருவாகும். பயணம் தவிர்ப்பது நல்லது. குடும்பத் தில் சுபிட்சம் உண்டாகும். ஜூலை 28-க்கு மேல் தம்பதியரிடையே அபிப் பிராயப் பேதம் உருவாக இடமுண்டு. எச்சரிக்கை. ஸ்பெகுலேஷன் துறைகளில் பிரவேசிக்க வேண்டாம்.

ஜூலை 22, 24, 26, 28, ஆகஸ்ட் 2, 4—நல்ல நாட்கள்.

## மரணக் குழந்தை

"எல்லாப் பிராணிகளுக்கும் மரணம் ஏதாவது ஒரு காரணத் தால் நேரும். தாங்களோ சீதை என்ற ம்ருத்யுவை வெகு தூரத்திலிருந்து மிகவும் கஷ் டப்பட்டு வீட்டிற்கு அழைத்து வந்தீர்கள்! பத்து மாதமாக கர்ப்பத்தில் வைத்துக் காப் பாற்றும் சிசுவைப் போல் ஜான கியைப் பத்து மாதம் வெகு ஜாக்கிரதையாகக் காப்பாற்றி முடிவில் தங்களுக்கு மரணம் என்ற குழந்தையைப் பெற்றீர் கள்."

ராவணன் மடிந்த பிறகு அவன் மனைவி மந்தோதரி இப்படிப் புலம்புகிறார்.

—ராமாயணம்

தொகுப்பு : சிரோமணி

## திருவோணம் (மகரம்)

**கி—கு—கே—கோ ('Kh' வரிசை)**

கோசாரம் சுமார்தான். புதன் சிறப்பாக சஞ்சரித்துக் கொண்டிருக்கிறார். உங்களுடைய விவகாரங்களில் புத்திசாலித்தனம் மிளிரும். அன்றாடப் பணிகள் செவ்வனே நடைபெறும். நட்சத்திர ரீதியாக குருவும் செவ்வாயும்கூட சாதகமாக இருக்கிறார்கள். இதனால் ஏற்பட இருந்த சில சங்கடங்களை இலகுவாக சமாளிக்கும் ஆற்றல் ஓங்கும். அரசுப்பணியாளர்கள் அடக்கமாக இருந்தால் வம்பில்லை. விவசாயிகளுக்கு வில்லங்கம் ஏதும் உருவாகாது. வீடு, நிலம் போன்றவற்றில் வியாஜ்ஜியம் உள்ளவர்கள் அதனைத் தற்போது தீர்த்துக் கொள்ள முயல வேண்டாம். தொழிற் தகராறுகள் ஏற்பட இடமுண்டு.

கடிதப் போக்குவரத்தில் கண்ணியம் காப்பது அவசியம். பொறியியல் துறையில் உள்ளவர்கள் மாமூல்போக்கை நடத்தினாலே போதும். புதிய முயற்சிகளில் பிரவேசிக்க வேண்டாம். பெரியோர் அபவாதத்துக்கு ஆளாகாமல் பார்த்துக் கொள்ளுங்கள். கணக்கியல் துறையில் உள்ளவர்களுக்கு ஒரு சிறு சோதனை ஏற்பட்டு அதில் வெற்றியும் கிடைக்கும். வியாபாரிகளுக்கு லாபகரமானப்போக்கு இருக்கும். சிலரால் இரட்டிப்பு லாபம் பெறவும் இயலும். குடும்பத்தில் சுபிட்சம் காக்கப்படும். காதலர்கள் தங்களுடைய களியாட்டங்களில் ஒரு கட்டுப்பாட்டை அனுசரித்து கண்ணியம் காப்பது அவசியம். கலைத் துறையில் சிக்கல் ஏற்படாது என்றாலும், மந்தநிலை காணப்படும். ஸ்பெகுலேஷன் துறைகளில் பிரவேசிக்க வேண்டாம்.

ஜூலை 21, 23, 25, 27, 29, ஆகஸ்டு 1, 3; 5—நல்ல நாட்கள்.

## அவிட்டம் 1, 2-ம் பாதங்கள் (மகரம்) 3, 4-ம் பாதங்கள் (கும்பம்)

**க—கி—கு—கே ( G வரிசை)**

முன்னிரண்டு பாதங்களில் பிறந்த மகர ராசிக்காரர்களுக்கு புத சஞ்சாரம் சிலாக்கியமாக இருக்கிறது. நல்ல இடத்தில் சனியும் செவ்வாயும் இல்லை என்றாலும் நட்சத்திர ரீதியாக அனுகூலமாக இருக்கிறார்கள். இதனால் உங்களுடைய கஷ்டங்களில் ஒரு கட்டுப்பாடு உண்டாகி உபத்திரவம் குறையும். கல்விப் பயனை மாணவர்கள் சீராகப் பெறத் தடையில்லை. வியாபாரத்தில் நல்ல லாபம் காணவும் இடமுண்டு. அரசு உத்தியோகஸ்தர்கள் அவதிக்குள்ளாக மாட்டார்கள். அன்றாடப் பிரச்சினைகளில் தொய்வு உண்டாகாது. பொருளாதார சிக்கல் உருவாகாது. ஆனால் வேண்டாத சச்சரவுகளை —கஷ்டங்களை எதிர் நோக்க வேண்டியிருக்கும். குடும்பத்தில் ஒருவரை ஒருவர் புரிந்துகொண்டு நாட்களை கழிப்பது அவசியம். கலைத்துறையில் உள்ளவர்களுக்கு மாமூல் போக்கு இருக்கும். பயணத்தைத் தவிர்ப்பது நல்லது.

பின்னிரண்டு பாதங்களில் பிறந்த கும்பராசிக்காரர்களுக்கு கிரகங்களில் பல நல்லவிதமாக சஞ்சரித்துக் கொண்டிருக்கின்றன. பதவி உயர்வுக்குத் தகுதிவாய்ந்த அரசு அலுவலர்களுக்கு அதற்கான நேரம் இப்போது கனிந்து வரும். அரசியல்வாதிகள் ஏற்றம் பெறுவர். பெரிய தொழிலகங்களில் பணிபுரியும் நிறுவன நிர்வாகத்திலுள்ளவர்களுக்குப் பாராட்டும் மகிழ்ச்சியும் ஏற்படும். முதலாளி —தொழிலாளி உறவில் இணக்கம் ஏற்பட்டு ஸ்தாபனம் சிறக்கும். பயணம் ஒன்றை மேற்கொள்ள நேரலாம். அதனால் பயனும் உண்டாக

## அமிருதமும் விஷமாகும்

உபநிஷத் போன்றவைகளை முற்கால அறிஞர்கள் மறைத்து வைத்துக்கொண்டு மக்களுக்கு தாராளமாக வழங்காமல் உலோபிகளாக நடந்து கொண்டார்கள் என்று சிலர் தவறாக எண்ணுவதுண்டு.

மருந்துகளை வைத்தியர்கள் மிக ஜாக்கிரதையாகத்தான் வைத்து வழங்குவார்கள். மருந்தை அறிந்து உபயோகித்தால் அது அமிருதம் போன்ற பொருளாகும். ஆனால் அதுவே அறியாதவர்கள் கையில் அபாயமான விஷமாகும். அத்யாத்ம உண்மைகள் பக்குவமும் தகுதியும் பார்த்தே உபதேசம் செய்யத் தகும். தீர விளங்காத விஷயங்கள் தவறான பொருளுக்கு இலக்காகும்; தீமைக்குக் காரணமாகும்.

—ராஜாஜி

தொகுப்பு : ஆர். வெ.

இடமுண்டு. காதலர்கள் தங்களுடைய அந்தரங்க காதலை பெற்றோருக்கு வெளிப்படுத்த இது நல்ல நேரம். உழைப்பாளிகள் ஏற்றம் பெறுவர். பொறியியல், விஞ்ஞானம் போன்ற துறைகளில் உள்ளவர்கள் புதிய சாதனையைச் செய்து காட்ட இது நல்ல சந்தர்ப்பம். கலைத்துறையில் மாமூல் போக்கு நீடிக்கும். ஸ்பெகுலேஷன் துறைகளில் ஓரளவு லாபம் காணலாம்.

ஜூலை 24, 26, 28, 29 ஆகஸ்டு. 2, 4—நல்ல நாட்கள்.

## சதயம் (கும்பம்)

**கோ—ஸ—ஸீ—ஸு**
**G**

சிறப்பான நேரம் நடந்து கொண்டிருக்கிறது. உங்களுடைய கௌரவம் ஓங்கும். பொருளாதார அந்தஸ்து உயரும். அரசு அலுவலர்கள் மேலதிகாரிகளின் ஆதரவுக்கு உள்ளாவார்கள். செவ்வாய்கூட நட்சத்திர ரீதியாக சாதகமாக இருப்பதால் உங்களுடைய செயல்களில் ஒரு விறுவிறுப்பு ஏற்படும். விவசாயிகள் ஆதாயம் காணமுடியும். பொறியியல் துறை சிறப்படையும். காவல், ராணுவம் போன்ற இனங்களில் பணியாற்றுவோர் பாராட்டுப் பெற முடியும். ஆசிரியர் — மாணவர் உறவு சுமுகமாக இருக்கும். கற்றறிந்த மேலோர் கௌரவிக்கப்படுவார்கள். திடீர் பொருள் வரவுக்கும் இடமுண்டு. மருத்துவத்துறையில் உள்ளோர் ஒரு பெரிய சாதனையைச் செய்து ஏற்றம் காண இடமுண்டு.

வியாபாரத்தில் சற்று மந்தநிலை உண்டாகலாம். வெளிநாட்டுத் தொடர்புடைய வியாபாரிகள் எச்சரிக்கையாக இருந்தால் வரும் நஷ்டத்தைத் தவிர்க்கலாம். கடிதப் போக்குவரத்து சகாயமாக இருக்கும். காதல் விவகாரங்களில் தலையிட்டுள்ளவர்களுக்கு மகிழ்ச்சியான நேரமாக இருக்கும். பெரியோர் ஆசியும், யோசனையும் தக்கசமயத்தில் உங்களுக்கு கிடைக்க இடமுண்டு. கலைத்துறையில் உள்ளவர்கள் ஏற்றம் பெறுவார்கள். குடும்பத்தில் குதூகலம் தாண்டவமாடும். இந்தப் பதினைந்து நாட்களில் பிற்பகுதி சில சோதனைக்கு உள்ளாகலாம். முதலாளி — தொழிலாளி உறவில் ஒரு சிறு அபிப்பிராயபேதம் உண்டாக இடமுண்டு. என்றாலும், பொதுவாக இந்தப் பதினைந்து நாட்களும் திருப்திகரமான நாட்களாக இருப்பதை நீங்கள் உணரமுடியும்.

ஜூலை 22, 24, 26, 31, ஆகஸ்டு 2, 4—நல்ல நாட்கள்.

## பூரட்டாதி
## 1, 2, 3-ம் பாதங்கள் (கும்பம்)
## 4-ம் பாதம் (மீனம்)

**ஸ—ஸோ—தா—தி (D)**

மூன் மூன்று பாதங்களில் பிறந்த கும்பராசிக் காரர்களுக்கு உன்னதமான நேரம் நடந்து கொண்டிருக்கிறது. குரு உங்களுடைய எதிர்கால நல்வாழ்வுக்கான அடிப்படைக் காரியங்களை முனைந்து செய்வார். உங்கள் அந்தஸ்து ஓங்கும். பொருளாதார அபிவிருத்தி உண்டாகும். பெரியோர் ஆசியும், உறவினர் ஆதரவும் கிட்டும். அரசு அலுவலர்கள் மேன்மையடைவர். சிறு தொழிலில் ஈடுபட்டுள்ள தொழிலாளர்கள் ஏற்றம் காண்பர். பெரிய தொழிலகங்களில் மாமூல் போக்கு சரிவரவே நடந்துவரும். உடல்நலம் சீராக இருக்கும். கடிதப் போக்குவரத்து மகிழ்ச்சி அளிக்கும். விவசாயிகளுக்குச் சுமாரான நேரந்தான். கணிதத் துறையில் உள்ள வர்கள் கவனமாக இருந்தால் பிழை

### கந்தர்வ நகரம்

ஆகாயத்தில் பிராகாரங்களும், கிருகங்களும், கோபுரங்களும் விசித்திரான வர்ணங்களுடனும் உருவங்களுடனும், த்வஜம், தோரணம், மாலை முதலியவற்றால் அலங்கரிக்கப்பட்டுத் தோன்றினால் அது கந்தர்வ நகரம் எனப்படும்.

அரசர்களுக்குள் கோர யுத்தம் நடந்து அதில் எண்ணிறந்த படைகள் மடியும் என்பதற்கு அது ஓர் அடையாளம்.

—வராஹமிஹிர ஸம்ஹிதை

தொகுப்பு : ஆர். வெ.



நேராது. குடும்பம் குதூகலமாக இருக்கும்.

கடைசி பாதத்தில் பிறந்த மீன ராசிக்காரர்களுக்கு கோசாரம் சுமார் தான். சுக்ர பலம் இருக்கிறது. உங்களுடைய சுகங்களுக்குக் குறைவு ஏற்படாது. குருபலம் இல்லை. அதனுல் சில சங்கடங்கள் உண்டாவதைத்தடுக்க முடியாது. குருப்பிரீதியாகச் சான்ருேர்களை வரவழைத்து அவர்கள் உள்ளம் குளிர உணவிட்டு மகிழுங்கள். இதனுல் அந்தக் குளிர்ந்த உள்ளங்களின் நல்லாசி கிடைத்து நன்மைகள் பெற வாய்ப் பேற்படும். இந்த நேரத்தில் புத்திசாலித் தனம் மிகுந்திருக்குமாதலால் சங்கடங்களைச் சமாளிக்கும் ஆற்றல் வரும். வியாபாரிகளுக்கு அளவான லாபம் இருந்துவரும். வித்தைகளில் தேர்ச்சியும், கல்வியில் ஊக்கமும் உண்டாகும். முதலாளி — தொழிலாளி உறவில் இணக்கம் ஏற்பட்டு ஸ்தாபனம் சிறக்கும். குடும்பத்தில் மகிழ்ச்சி நிறைந்திருக்கும். ஸ்பெகுலேஷன் துறைகளில் ஈடுபட வேண்டாம்.

ஜூலை 21, 23, 25, 27, 28, 30, ஆகஸ்டு 1, 3, 5 - நல்ல நாட்கள்.

## உத்திரட்டாதி (மீனம்)

து—ஸ்ரீ—ஜ—தா
D Sh Jh Dh

கோசாரம் பரவாயில்லை. நல்ல இடத்தில் இல்லாத குருவும் செவ்வாயும் கூட நட்சத்திர ரீதியாக அனுகூலமாக இருக்கிருர்கள். அரசு அலுவலர்களுக்கு மாமூல் போக்கில் குறை வராது. அரசாங்கக் காரியங்களில் சற்று சுறுசுறுப்பு ஏற்படவும் இடம் உண்டு. வியாபாரிகளுக்கு லாபகரமான போக்கு இருந்துவரும். நிறுவன நிர்வாகத் துறையில் உள்ளவர்கள் தங்களுடைய தொழிலாளர்களிடத்தில் பாராட்டுப் பெற முடியும். உலோகத் தொழிலில் ஈடுபட்டுள்ள அனைவருக்குமே இது நல்ல நேரம். புனித மார்க்கத்தில் சிலருடைய புத்தி செல்லவும் இடமுண்டு. தருமப் பணி, தெய்வப்பணிகளில் ஈடுபாடு ஏற்பட்டு ஏற்றம் பெறவும் வாய்ப்புண்டு.

கலைத்துறையில் உள்ள எழுத்தாளர்கள், கவிஞர்கள், நடிகர்கள் ஆகியோருக்குப் புதிய தெம்பு உண்டாகும். தங்களுடைய ஆற்றலுக்கு ஏற்ற பொருளைப் பெறுவதோடு புகழையும் பெறமுடியும். காதலர்கள் களிப்படைவர். கணவன் — மனைவியரிடையே சுமுகம் நிலவும். பெற்ருேர் நலனில் பிள்ளைகளின் அக்கறை ஓங்கும். வெளிநாட்டுத் தொடர்புடைய வியாபாரிகள் எச்சரிக்கையாக இருப்பது நல்லது. விவசாயிகளுக்கு வில்லங்கம் ஏதும் வராது. பயணத்தைத் தவிர்ப்பது நல்லது. பந்துக் கூட்டங்களால் தொல்லை வரலாம். எந்த காரியத்திலும் முதலில் ஒரு கத்திரிப்பு இருந்து பிறகு தொடரும். விக்ன விநாயகனைத் தொழுது வந்தால் எல்லாம் நன்மையாக முடியும்.

ஜூலை 22, 24, 26, 28, 29, ஆகஸ்டு 2, 4-நல்ல நாட்கள்.

## ரேவதி (மீனம்)

தே—தோ—சா—சி
D D Ch Ch

கோசாரம் சுமார்தான். என்ருலும் உங்களுடைய அந்தஸ்துக்குச் சோதனை வராது. குருபலம் இல்லாததால் சில சங்கடங்களை அனுபவிக்க வேண்டியிருக்கும். குருப் பிரீதியாக வேதம் அறிந்த விற்பன்னர்களை வரவழைத்து அவர்களுடைய நல்லாசியைப் பெற்று வாருங்கள். தீமைகளின் கொடூரம் குறைய இடமுண்டாகும். மாணவர்கள் கல்விப் பயனைப் பெற இடையூறு எழாது. வியாபாரிகளுக்கு அளவான லாபம் இருந்துவரும். அரசுப் பணியாளர்கள் ஓர் அவதிக்கு உள்ளாகி பின் நிலைமையில் சீர் பெறலாம். விவசாயிகளுக்கு இது ஏற்ற நேரம் இல்லை. பொறியியல் வல்லுநர்கள் புதிய முயற்சியில் தற்போது ஈடுபட வேண்டாம்.

மருத்துவத் துறையில் உள்ளவர்கள் கவனக் குறைவாகப் பிழை செய்ய நேரிடலாம். எச்சரிக்கை. ஒரு சிலருக்கு தாம் செய்த குறை காரணமாக பீதி அடைய நேரும். வெற்றிவேல் முருகனை ஆராதித்து வந்தால் அவலம் குறையும். கலைத்துறையில் உள்ளவர்களுக்கு சங்கடம் விளையாது. குடும்பத்தில் சச்சரவு வராமல் பார்த்துக் கொள்வது ஒவ்வொருவருடைய பொறுப்பாகும். தம்பதியரிடையே சுமுகம் நிலவும். பிள்ளைகளை முன்னிட்டு செலவு செய்ய நேரலாம். கடிதப் போக்குவரத்து சுவைபடாது. காதலர்கள் தங்கள் களியாட்டங்களில் ஒரு கட்டுப்பாட்டை விதித்துக் கொள்வது நல்லது. பயணம் தவிர்க்கப்பட வேண்டும். ரேஸ்-லாட்டரி இனங்களில் பிரவேசிக்க வேண்டாம்.

ஜூலை 21, 23, 25, 27, ஆகஸ்டு 1, 3, 5 - நல்ல நாட்கள்.

## கற்றுக்கொள்ளுங்கள்...

# நட்சத்திரக் குறியும் சாலமன் ரேகையும்




குரு மேட்டில் நட்சத்திரக்குறி (s) இருப்பது மிகவும் நல்லது. அத்தகைய நட்சத்திரக் குறியினால் ஏராளமான நன்மைகள் உண்டு. பொருளாதாரத்தில் தாழ்ந்துள்ள குடும்பத்தில் பிறந்துள்ள ஒருவர் கையில் இத்தகைய நட்சத்திரக்குறி இருந்தால் அவர் தனது அறிவின் திறமையாலும் பெருஞ் செல்வந்தர்களின் உதவியாலும் முன்னேற்றம் அடைந்து, தானும் ஒரு காலத்தில் தான் சாலமன் என்ற மன்னன் முன்னொரு காலத்தில் மகத்தான புகழுடன் வாழ்ந்தான். அவனது அறிவுத்திறனை அகில உலகமும் வியப்புடன் போற்றிப் புகழ்ந்ததுண்டு. கூரிய அறிவும் நேரிய பார்வையும் கொண்ட அவன் சிக்கலான எந்தப் பிரச்சினையையும் எளிதில் ஆராய்ந்துஏற்றமானதீர்வுகண்டான்என உலக வரலாறு அவனைப்பற்றி புகழ்ந்து எழுதியுள்ளது. அத்தகைய அறிவுத் திறனை ஒருவர் அடைய வேண்டுமானால் அவர் கையில் அந்த மன்னன் பெயரால் அழைக்கப்படும் சாலமன் ரேகை அமைந்திருகக வேண்டும். சில சமயங்களில் இந்த ரேகை குருமேட்டின் மத்திய பாகம் வரை வந்து (a-b) நின்றுவிடும். அப்படிப்பட்டவர்கள் வாழ்க்கையில் 40 வயதுக்கு மேல் சிறந்த நிலையை அடைவார்கள். அரசாங்க உத்தியோகத்தில் உள்ளவர்கள் அந்த வயதில் ஒரு குறிப்பிட்ட செளரவமான பதவி உயர்வு பெறுவார்கள். சிறந்த வருமானமும், செல்வாக்கும் அவர்களைத் தேடி வரும். அதுவரை வாழ்வில் ஏற்பட்டு வந்த சிக்கல்களைச் சமாளித்து அமைதியான வாழ்வை மேற்கொள்ளும் வாய்ப்பு அவருக்குக் கிட்டும்.

பெரும் செல்வந்தராகவும், செல்வாக்கு உடையவராகவும் ஆகும் வாய்ப்பினைப் பெறுவார். மக்களிடத்தில் செல்வாக்குக் கிடைக்கும். அவருக்கு சத் காரியங்களில் ஈடுபாடு ஏற்படும். அவரால் மக்கள் சமூகத்திற்கு நன்மை உண்டாகும். கல்வியும், செல்வமும் அவரைத் தேடிவரும். அவருக்கு அரசாங்கத்தில் உயர் பதவியும் கிடைத்து, அதில் சீரும் சிறப்பும் பெற்று மகோன்னதமாக விளங்குவார்.

குருமேட்டில் குருவிரலுக்கு அடியில் வில்போல் வளைந்து செல்லும் (a-a) ரேகையை 'சாலமன்' ரேகை என்று குறிப்பிடுவர். இத்தகைய ரேகை நன்கு அமைந்திருந்த காரணத்தால்

எனவே, ஒருவர் கையில் குருமேட்டில் நட்சத்திரக்குறியும், சாலமன் ரேகையும் இருந்தால் அவர் எவ்விதத்திலும் மேன்மை அடைந்தே தீருவர். வியாபாரியானல் தனது வியாபாரத்தில் ஈடுஇணையற்றப் புகழைப் பெறுவர். அரசியல்வாதியானல் அமைச்சராகும் தகுதியையும் அடைவர். அரசாங்க ஊழியரானல் உயர் பதவியை அடைந்து ஓய்வு பெறுவர். அத்தகையவர்களுக்குச் செல்வமும் செல்வாக்கும் உண்டாகும். யாவராலும் போற்றப்படுவர். மன அமைதியும் மக்கள் செல்வமும் ஏற்படும். குரு பகவானின் பரிபூர்ண கடாட்சம் உண்டாகும்.

—ஜெயலட்சுமி கிருஷ்ணன்

## நோயற்ற வாழ்வு

இயற்கையின் சட்ட திட்டங்களை மீறி செயல்படுவதை 'பாபம்' என்கிறது தர்மசாஸ்திரம். உடலுக்கும் உள்ளத் திற்கும் அமைதியின்மையை உண்டாக் கும் பிணிதான் தண்டனையாக அமை கிறது. தவறைப் புரிந்துகொண்டு மனம் நொந்து மன்னிப்புக் கோரினால் தண் டனையின் 'பளு' குறையும், அல்லது தண்டனையிலிருந்து விடுபடவும் செய்ய லாம்.

களின் அளவையும் அவைகளை அனுபவிக் கும் காலங்களையும், ராசிகளில் குறிப் பிட்ட இடங்களில் இருந்துகொண்டு கிரகங்கள் சூசகமாக அறிவிக்கின்றன. வரப்போகும் நிகழ்ச்சிகள் நிழலாடும் நிலைக்கண்ணாடி ஜோதிடம். வரப் போகும் புயலைத் தடுத்து நிறுத்த முடி யாதாயினும் முன்னமேயே தெரிந் திருந்தால் தப்பித்துக் கொள்ள முடியு மல்லவா? வணக்கமும் அடக்கமும்தான் கடவுளிடத்தில் நமது வேண்டுகோளாக அமைகிறது. எங்கும் நிறைந்த கடவுள் கிரகங்களின் வாயிலாக நமது வேண்டு கோளை ஏற்று அருள்புரிவார். அடக்கத் துடன் நாம் செய்யும் வேண்டுகோள் தான் 'பரிகாரம்'.

### இதிகாசம் கூறும் ஜ்வரம்

'ஜ்வரம்' என்ற பிணி உடலுறுப்பு

# 8-வயதிலோ 30-வயதிலோ வைசூரி வந்தால்...

### கிரக வழிபாடு

இயற்கையின் சட்டக் காவலர் 'கடவுள்'. நாம் இழைத்த பாபச் செயல்களுக்கு கிரகங்கள் வாயிலா கவும் புலன்கள் வாயிலாகவும் பிணியை உண்டுபண்ணி தண்டனையை நிறை வேற்றுகிறார். புலன்களை அடக்கிக் கிரகங் களை வழிபட்டு காவலனை சரணடைந் தால் பிணி விலகி, சுகத்தை அடைய லாம். வழிபடும் முறைகள்தான் 'பிரா யச் சித்தம்.' அதாவது பரிகாரம் என்ற தொகுப்பில் கருணையுள்ளம் படைத்த முனிவர்கள் நமக்கு அருளியிருக்கிறார் கள். அதை அலட்சியம் செய்வது அறி வீனம். 'மனிதபுத்திக்கு எட்டும் விஷ யங்கள்தான் உண்மை' என்ற சித்தாந் தத்தில் இருப்பவர்களுக்கு ஒரு வார்த்தை — இன்றைய வைத்தியரால் கைவிடப்பட்ட பிணியிலாவது பரிகா ரத்தைப் பயன்படுத்திப் பார்ப்பதில் தவறில்லையே! ஆகையால் இன்றைய சமூகத்திற்கும் 'பலன்' அளிக்கக் கூடிய யவைதான் 'பரிகாரங்கள்'.

மனிதன் பூமியில் தோன்றிய உட னேயே அவன் வாழ்வின் சுகதுக்கங்

களைப் பூராவும் பாதிக்கிறது. தக்ஷனின் வேள்வியில் ஈசனின் நெற்றிக் கண்ணி லிருந்து உண்டானது 'ஜ்வரம்' என்று இதிகாசம் கூறுகிறது. நெருப்பின் தன்மையான சூடு உடலில் வியாபித்து நம்மை வாட்டுகிறது. வெளியில் தெரி யும் அக்னியின் தாபத்தைவிட 'ஜ்வர'த் தின் தாபம் அதிக வலிமை உடையது. அதைத் தோற்றுவித்த மஹேச்வர னையே ஆராதனம் செய்யச் சொல்லு கிறது, 'கர்மவிபாகம்' என்னும் நூல்.

குடும்ப நலனுக்கும், சமுதாய முன் னேற்றத்திற்கும் உகந்த தர்ம காரியங் களை கோபப்படுவதின் விளைவாக செய் யாமல் இருப்பவனும், தொடர்ந்து நல்ல காரியங்களைச் செய்யாமலோ அல்லது குறைத்தோ செய்பவனும் உஷ்ண ஜ்வரத்திற்கு ஆளாகிறான். இத்தகைய குறைபாடுடையவனை அவனது ஜாத கத்தில் இருந்து அறியலாம். ஜாதகத்தில் ஜ்வரத்திற்கு காரணமான சூரியன், சந்திரன், ராகு, புதன் முதலியவர்கள் அதற்குத் 'தகுந்த' ராசிகளில் இருந்து கொண்டு தங்களது தசை, புக்தி, அல்லது அந்தரம் இவைகளில் தண்டனை

வழுத்தூர் ராஜகோபால சர்மா

யாகப் பிணியைக் கொடுக்கத் தயாரா யிருப்பார்கள்.

## அபிஷேகம் மூலம் நிவர்த்தி

உஷ்ணத்தைக் குளிர்ச்சியால் தணிக்க லாம். குளிரை உஷ்ணத்தாலும் வெல்ல லாம். உஷ்ணத்தை உஷ்ணத்தால் வெல்ல முடியும் என்று ஆயுர்வேதம் கூறுகிறது. 'உஷ்ணம் உஷ்ணேன சாம்யதி'. உஷ்ண ஜ்வரத்திற்கு மஹேசனுக்கு அபிஷேகம் சொல்லப்பட்டது. அவ்விதமே சீத ஜ்வரத்திற்கு விஷ்ணுவிற்கு அபிஷேகம் சொல்லப்பட்டிருக்கிறது. இலட்சம் தடவை 'ஜாதவேதஸே' என்கிற மந்தி ரத்தை ஜபம் செய்ய வேண்டும். இந்த மந்திரம் அக்னியைப் போற்றுகிறது. இரண்டு ஜ்வரங்களிலும் இந்த மந்தி ரத்தை ஜபிக்கச் சொல்லுவதால் ஆயுர் வேத சித்தாந்தம் இங்கும் பொருத்த மாக இருக்கிறது. ஜ்வரத்தை ஜபிக்க தேவதைகளை வேண்டிக்கொண்டு அந்தணர்களுக்கு அறுசுவை உணவு அளிக்க வேண்டும் என்கிறார் வீரசிம்ஹர்.

இதுகுறித்து 'மஹேச்வர தந்திரம்' என்னும் நூல் விரிவாகவும் தெளிவா கவும் எடுத்துரைக்கிறது.

## சகல ஜ்வரங்களும் தீர கும்ப தானம்

தேன், நெய், வெல்லம், சக்கரை எள்ளு அல்லது ஜலம் இவைகளில் தனது நிலைக்குத் தகுந்தபடி ஒன்றைத் தேர்ந் தெடுத்து மண் கலசத்தில் வைத்து பூஜைசெய்து தானம் செய்ய வேண்டும்.

தொடர்ந்து வரும் ஜ்வரம், ஒரு நாள் இரண்டு நாள், மூன்று நாள் நான்கு நாள் இடைவெளியில் விட்டுவிட்டு வரும் ஜ்வரம், 15 நாட்களுக்கு ஒரு முறை வரும் ஜ்வரம், அவ்விதமே மாதத் திலும் வருஷத்திலும் வரும் ஜ்வரங்கள் அனைத்தும் விலகுவதற்கு இந்த 'கும்ப தானம்' பயன்படுகிறது. மஹார்ண வத்தில் சகல விதமான ஜ்வரத்தையும் போக்கவல்லது 'கும்பதானம்' என்று சொல்லப்பட்டிருக்கிறது.

## மாமுனிவர்கள் காட்டும் வழி

போதாயனர் 'த்ரியம்பகம்' என்ற மந்திரத்தால் ஜபஹோமங்களை செய்யச் சொல்கிறார். குறிப்பாக உஷ்ண-சீத ஜ்வரங்களில் இது அவசியம் என்கிறார்.

சாதாதபர் என்ற முனிவர் பயனுள்ள பரிகாரத்தைப் போதிப்பதில் வல்லவர். அவர் ஈசனையும் விஷ்ணுவையும் ஆரா தனை செய்ய வேண்டும் என்கிறார். கடவுளுக்காக ஒதுக்கப்பட்ட தனத்தை அபகரிப்பவனும் ஜ்வரத்திற்குள்ளா கிறான் என்கிறார்.

இதைத் தவிர ஜ்வரத்திற்கு தர்ப் பணம் முதலான முறைகளும் சொல்லப் பட்டிருக்கின்றன.

ஈசனின் திருநீறு ஈசன் கவச மந்தி ரத்தோடு (சிவகவசம்) உருவேற்றப் பட்டு நம் நெற்றியிலும் உடம்பிலும் பூசிக்கொண்டால் ஜ்வரம் அகலும் என்று கந்த புராணம் கூறுகிறது.

## ஜ்வர காயத்ரீ

ஜ்வர மந்திரத்தை ஜபித்து ஜ்வர காயத்ரியைச் சொல்லித் திருநீறை பூசிக் கொள்வதும் சம்பிரதாயத்தில் இருந்து வரும் பரிகாரம்.

''ஜ்வரராஜாய வித்மஹே த்ரிசிரஸ் காய தீமஹி, தன்னோ ஜ்வர: ப்ரசோத யாத்'' என்பது ஜ்வர காயத்ரீ.

ஜ்வரத்தில் கொடூரமானது 'வைசூரி'. 'ஸ்போடகம்' என்று வடமொழியில் சொல்லுவார்கள். ஜ்வர வகையைச் சார்ந்தது இது. உடம்பு தாங்கமுடியாத உஷ்ணத்தைச் சந்திக்கும்போது ஸ்போ டகமாக - வைசூரியாக உருவெடுக்கிறது. 'ஸ்போடகம்' ஏற்படுவதற்கு முன்பு ஜ்வரம் கடினமாக இருக்கும். புலன்களை அடக்கி 'பத்ய'மாக இருப்பதுதான் இன்றைக்கும் மருந்தாக இருக்கிறது. வைசூரியால் ஏற்படும் தொல்லைகளைக் குறைக்கவோ அல்லது மறைக்கவோ மருந்து கொடுக்கப்படுகிறதே தவிர பிணியை அகற்றப் பயன்படுவதில்லை. பிணி தானாகச் சிறுகச் சிறுகக் குறையத் தகுந்த சூழ்நிலையை உடலுக்கு ஏற் படுத்தினால் போதுமானது. ஏறக் குறைய காமாலை ஜ்வரத்தையும் இந்த வரிசையில் சேர்க்கலாம்.

'ப்ருஹத் பாராசர ஹோரா' என்னும் ஜோதிட நூல் 'மஸூரிகா' ஜ்வரத்தைப் (அம்மைநோய்) பற்றி குறிப்பிடுகின்றது.

## பராசரர் தரும் குறிப்பு

லக்னத்திலிருந்து (பிறக்கும் வேளை) 8-ம் இடத்தில் சனியும், சனியின் 2 அல்லது 12-ம் இடத்தில் செவ்வாயும்

இருந்தால், 8-வது வயதில் அல்லது 30-வது வயதில் வைசூரி அல்லது அந்த வகையைச் சார்ந்த 'நீர் போளன்' முதலிய வியாதிகள் வரும் என்று அறிவுறுத்துகிறுர் பராசரர்.

வைசூரி ஜ்வரத்திற்கு 'சீதளா' தேவியைப் பிரார்த்தனை செய்ய வேண்டும். சூட்டை தணிக்க வல்லவள் 'சீதளா' என்ற குளிர்ச்சியானவள். முத்ரயை பெயரில் வைத்துக் கொண்டிருப்பவள். 'அம்மை விளையாட்டு' என்று சம்பிரதாயத்தில் இந்த வியாதியை குறிப்பிடுவதுண்டு. தாயாரின் (அம்மை) சீற்றத்தால் ஏற்பட்டப் பிணியை அவளை சரணடைவதால் அகலும்.

'விதேஹர்' என்ற வைத்தியர் ஜ்வரத்திற்கு மருந்தையும் சொல்லி கிரகக் கோளாறினுல் ஜ்வரம் வருகிறது; ஆகையால் கிரகங்களைப் பூஜித்து ஜ்வரத்திலிருந்துவிடுபடலாம் என்கிறுர்.

ஜ்வரஸ்து பூஜனை: வாபி
ஸஹஸைவ உப்சாம்யதி.

## ஜ்வரத்தின் உருவம்

ஹரிவம்ச புராணத்தில் ஜ்வரத்தின் 'ஸ்வரூபம்' விளக்கப்பட்டு பூஜை, ஜபம், ஹோமம் இவைகளால் 'பரிகாரம்' செய்யும்படி கூறப்பட்டுள்ளது.

ஜ்வரத்திற்கு மூன்று கால்கள், மூன்று தலைகள், ஆறு கைகள், ஒன்பது கண்கள். பாபம் செய்தவர்களைத் துன்புறுத்துகிறது ஜ்வரம்.

'ஜ்வர: த்ரிபாத: த்ரிசிரா:
ஷட்புஜோ நவ லோசன:'

பட்டார ஹரிசந்திரர், ஈசனை ஜபம், ஹோமம், அர்ச்சனை, அபிஷேகம் முதலிய வழிகளில் மகிழ்வித்து அதன் வாயிலாக ஜ்வரத்தைப் போக்கிக் கொள்ள வேண்டும் என்கிறுர்.

நவக்கிரகங்களில் 'சூர்யன்' உஷ்ணமான கிரகம். அந்த கிரகத்தின் கோளாறு 'வைசூரி' முதலிய ஜ்வரத்திற்கு காரணமாகிறது. பருவ மாறுபாட்டில் உஷ்ணம் மேலோங்கியபோதுதான் இந்த வியாதி தோன்றுகிறது. அதற்கு சூரியனின் கதியும் காரணமாகிறது. 'ஆதித்யாத்மா' ஈசன் என்று வேதம் விளக்குகிறது. ஈசனை வழிபட்டால் ஆதித்யன் (சூர்யன்) சந்தோஷப்படுகிறுன். வியாதி தானுகவே விலகி விடுகிறது.

# தீக்ஷிதரின் 'நவக்ரக கிருதிகள்'

## 1. சூரியன்

'ஒளி தருபவரும், சிம்ம ராசிக்கு அதிபதியும், மகான்களால் பூஜிக்கப்படுபவரும், தேஜஸை மேலும் பிரகாசிக்கச் செய்பவரும், உடல் நலத்தை அளிப்பவரும், தாமரை மலருக்கு உகந்தவரும், ஆயிரம் கிரணங்களைக் கொண்டவரும், கர்ணனைப் பெற்றவரும், குரூரமான பாபங்களை ஒழிப்பவரும், குருகுஹருக்கு மகிழ்ச்சியூட்டுபவரும், இரவில் அக்னியில் உறைபவரும், ஞானிகளால் துதிக்கப்படுபவரும், பகலின் நாயகரும், கிரகங்களில் தலை சிறந்தவரும், தீரர்களால் அர்ச்சிக்கப்படுபவரும், அனைத்துக் கர்மங்களுக்கும் சாட்சியானவரும், ஏழு குதிரைகளால் இழுக்கப்படும் ரதத்தில் வருபவரும், சூர்ய அஷ்டாக்ஷர மந்திரத்தால் பெறப்படுபவரும், ஸ்வர்ண ஸ்வரூபங் கொண்டவரும், மும்மூர்த்திகளின் உருவமானவரும், பக்தி முக்தியளிப்பவரும், அழகிய சாயாதேவியின் கணவருமான ஸ்ரீ சூர்ய மூர்த்தியே, உம்மை வணங்குகிறேன்!'

—இக் கிருதி அமைந்துள்ள ராகம், ஸௌராஷ்ட்ரம். சதுரஸ்ர த்ருவ தாளம். அக்னியை அதிதேவதையாகக் கொண்ட ரவியைப் போற்றும், இக் கிருதியை, 'அக்னி' சக்கரத்தில் உள்ள 'சூர்யகாந்தம்' என்ற ராகத்தில் பிறந்த, ஸௌராஷ்ட்ர ராகத்தில் ஸ்ரீ முத்துசாமி தீக்ஷிதர் அமைத்திருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

தொகுப்பு: **'அக்ஷயன்'**

# அதிர்ஷ்டத் தேதிகள்–நேரங்கள்...

ஆஸ்ட்ரோ - நியுமராலஜி ஓர் அபூர்வமான கணிதம். அதன் அடிப்படையில், ஒவ்வோர் ஆங்கிலத் தேதியிலும் பிறந்தவர்களுக்கு அவர்கள் வியாபாரிகளானாலும் சரி, மற்ற எந்த நிலையில் உள்ளவர்களானாலும் சரி — அதிர்ஷ்டத் தேதிகளும் அதிர்ஷ்ட நேரங்களும் தரப்பட்டுள்ளன.

உறுதியாகவும் நம்பிக்கையோடும் பின்பற்றினல் பயன் உண்டாகும்.

## 21-7-80 முதல் 5-8-80 வரை

அதிர்ஷ்டத் தேதிகள் அதிர்ஷ்ட நேரங்கள்

### பிறந்த தேதிகள்: 1, 10, 19, 28

ஜூலை

21—திங்கள் 9-11, 12- 2, 3-4
27—ஞாயிறு 9-10, 12- 1, 2-4
30—புதன் 10-11, 12- 1, 3-4

ஆகஸ்டு

1—வெள்ளி 9-11, 12- 2, 3-4
2—சனி 7- 8, 10-11, 1-3

### பிறந்த தேதிகள்: 2, 11, 20, 29

ஜூலை

22—செவ்வாய் 10-12, 1- 3, 4-5
25—வெள்ளி 7- 8, 11-12, 5-6
31—வியாழன் 11-12, 1- 2, 5-6

ஆகஸ்டு

2—சனி 7- 8, 10-12, 1-2
3—ஞாயிறு 7- 8, 9-10, 3-4

### பிறந்த தேதிகள்: 3, 12, 21, 30

ஜூலை

21—திங்கள் 10-11, 12- 1, 3-4
27—ஞாயிறு 7- 8, 9-10, 12-1
30—புதன் 10-11, 12- 1, 3-4

ஆகஸ்டு

3—ஞாயிறு 7- 8, 11-12, 3-4
4—திங்கள் 10-11, 12- 1, 3-4

### பிறந்த தேதிகள்: 4, 13, 22, 31

ஜூலை

21—திங்கள் 10-11, 12- 1, 3-4
27—ஞாயிறு 7- 8, 9-10, 2-4
30—புதன் 9-11, 12 -2, 3-4

ஆகஸ்டு

1—வெள்ளி 9-11, 12- 2, 3-4
2—சனி 7- 8, 10-11, 1-3

### பிறந்த தேதிகள்: 5, 14, 23

ஜூலை

23—புதன் 9-10, 12-1, 3-4
25—வெள்ளி 7-8, 2-3, 5-6
29—செவ்வாய் 9-10, 2-4, 5-6

ஆகஸ்டு

3—ஞாயிறு 9-10, 11-12, 3-4
5—செவ்வாய் 10-11, 1-2, 5-6

### பிறந்த தேதிகள்: 6, 15, 24

ஜூலை

21—திங்கள் 6-7, 12-2, 3-4
24—வியாழன் 6-7, 10-11, 3-4
26—சனி 6-7, 10-11, 3-4

ஆகஸ்டு

1—வெள்ளி 9-11, 12-2, 3-4
3—ஞாயிறு 6-7, 11-1, 3-4

### பிறந்த தேதிகள்: 7, 16, 25

ஜூலை

22—செவ்வாய் 7-8, 11-12, 2-3
25—வெள்ளி 7-8, 11-12, 2-3
27—ஞாயிறு 7-8, 12-1, 2-3

ஆகஸ்டு

2—சனி 7-8, 10-12, 1-3
3—ஞாயிறு 7-8, 12-1, 2-4

### பிறந்த தேதிகள்: 8, 17, 26

ஜூலை

21—திங்கள் 10-11, 12-1, 3-4
28—திங்கள் 10-11, 1-2, 4-5
30—புதன் 10-11, 12-1, 3-4

ஆகஸ்டு

1—வெள்ளி 9-10, 12-2, 3-5
2—சனி 7-8, 10-11, 2-3

### பிறந்த தேதிகள்: 9, 18, 27

ஜூலை

21—திங்கள் 10-11, 12-1, 3-4
23—புதன் 9-10, 12-1, 5-6
29—செவ்வாய் 10-11, 1-2, 4-5

ஆகஸ்டு

1—வெள்ளி 9-10, 1-2, 3-4
3—ஞாயிறு 7-8, 12-1, 3-4

**ஒரு விளக்கம் :** பக்கத்தில் காணப்படும் 7-8 என்பது 7 மணியிலிருந்து 8 மணி வரை என்று குறிக்கும். இரவுக்கும் பகலுக்கும் இப்படியே பார்த்துக் கொள்ள வேண்டும்.

# சூரிய புண்ணிய காலம்

நவக்கிரக நாயகர்களில் முதன்மை யானவனுன சூரியன் சஞ்சரிக்கும் இராசி யின் பெயரைக் கொண்டே அந்தந்த மாதங்களுக்குப் பெயர்கள் வழங்கப் பெறுகின்றன.

மேஷம் முதல் மீனம் வரையில் உள்ள 12 ராசிகளிலும் சூரியன் சஞ்சாரம் செய்கிறுன். அவன் ஒரு ராசியிலிருந்து மற்றேர் ராசிக்குச் செல்லும் சமயமே 'மாதப் பிறப்பு' என்றழைக்கப் பெறு கிறது. சித்திரை மாதப் பிறப்பு — 'சித்திரை விஷு' என்றும்; ஐப்பசி மாத பிறப்பு—'ஐப்பசி விஷு' என்றும் பெயர் பெறும். இந்த இரண்டிலும் மாதம் பிறத்தற்கு முன் எட்டு நாழிகை யும், மாதம் பிறந்தபின் எட்டு நாழிகை யும் புண்ணிய காலமாகும். ஆடி மாதப் பிறப்பு — 'தட்சிணுயனம்' எனப் பெயர் பெறும். இதில் மாதம் பிறக்கு முன் பதினுறு நாழிகை புண்ணிய கால மாகும். தை மாதப் பிறப்பு — 'உத்தரா யணம்' எனப்படும். இதில் மாதம் பிறந்தபின் பதினுறு நாழிகை புண்ணிய காலமாகும். ஆனி, புரட்டாசி, மார்கழி பங்குனி — இந்த நான்கு மாத பிறப்பும் 'சடசீதிமுகம்' என்றழைக்கப்படும். இம்மாதங்கள் பிறந்தபின் பதினுறு நாழிகை புண்ணிய காலமாகும். வைகாசி, ஆவணி, கார்த்திகை, மாசி என்கிற மாதங்களின் பிறப்பு 'விட்டுணு பதி' என்று வழங்கப்பெறும். இந்த நான்கு மாதங்கள் பிறக்குமுன் பதினுறு நாழிகை புண்ணிய காலமாகும்.

சூரியன் தை மாதத்தில் மகர ராசியில் இருக்கும்போது — ஞாயிற்றுக்கிழமை, அமாவாசை, திருவோண நட்சத்திரம், வியதிபாத யோகம் என்கிற நான்கும் கூடினுல் — 'அர்த்தோதய புண்ணிய கால' மாகும். அதேபோல் மகர ராசியில் இருக்கும்போது — திங்கட்கிழமை அமாவாசை, திருவோணம், வியதி பாத யோகம் என்ற நான்கும் கூடினுல் 'மகோதய புண்ணிய கால' மாகும்.

சூரியன் பூராட நட்சத்திரத்தில் சஞ்சரிக்கும் காலம் 'கெர்ப்போட்டம்' எனப்படும். இது பெரும்பாலும் மார்கழி மாதம் 14 தேதி முதல் ஏறக்குறைய 14 நாட்கள் நீடிக்கும்.

பரணி நட்சத்திரம் நாலாம் பாதமும் — கிருத்திகையின் நான்கு பாதங்களும் ரோகணியின் முதல் பாத மும் ஆக ஆறு பாதங்களிலும் சூரியன் சஞ்சரிக்கும் காலம் அக்னி நட்சத்திரம் எனப்படும். இது பெரும்பாலும் சித் திரை 20-ம் தேதிக்கு ஆரம்பமாகும்.

சூரியனை முதன்மையாகக் கொண்டு அவன் ஓர் இராசியில் செல்லும் நாழிகையைக் கணக்கிட்டுச் செயல் நடத்தும் முறையை — 'சூரிய சித்தாந் தம்' என்றும், 'சௌரமானம்' என்றும் அழைப்பர் ஜோதிட நூல்வல்லார்.

—பைரவி



## செல்வி ரஞ்சனியின் சங்கீத உபன்யாசம் அரங்கேற்றம்

மகம் நட்சத்திரத்தில் 4-10-72-ல் பிறந்தவர் சிறுமி ரஞ்சனி. எட்டு வயதி லேயே உபன்யாசம் செய்யும் அழகைக் கண்டு மகிழ்கிறேம். தஞ்சை ஈச்சம்பட்டு திரு. ரமணி அய்யரின் பௌத்திரியும் — திரு. டி. என் .சுப்ரமண்ய பாகவதரின் மாணவியுமான செல்வி ரஞ்சனியின் 'ருக்மணி கல்யாணம்' சங்கீத உபன் யாச அரங்கேற்று விழா கடந்த 9-6-80 அன்று தஞ்சை மேலவீதி கிருஷ்ணன் கோயிலில் சிறப்பாக நடைபெற்றது. திரு. சுப்ரமண்ய பாகவதர் பேசுகை யில் ரஞ்சனியின் கதை சொல்லும் முறை என்னைப் பெரிதும் மகிழ்வித்தது என்றுர். கலைமாமணி டி. ஆர். கமலா மூர்த்தி, சங்கீத பூஷணம் போழக்குடி கணேச அய்யர் ஆகியோர் பாராட்டிப் பேசுகையில் இத்தகையக் குழந்தையைப் பெற்றது பெற்றேர்கள் செய்த புண்ணியமே என்று குறிப்பிட்டார்கள். திருமுருக கிருபானந்த வாரியார் டி. எஸ். ரெங்கனுத தாத்தாச்சாரியார் உள்ளிட்டப் பல பெருமக்கள் வாழ்த்து செய்து அனுப்பியிருந்தார்கள்.

## கர்ண பரம்பரைக் கதை

உஜ்ஜயினி மாநகரில் முன்னொரு காலத்தில் ஒரு பெரிய ஜோதிட விற்பன்னர் இருந்தார். ஜோதிட சாஸ்திரங்களைக் கற்றுத் தேர்ந்து, கரை கடந்தவர்; அவருடைய கணித முறை தப்பாது; அவருடைய வாக்குத் தவறாது'— என்றெல்லாம் பெயரெடுத்தவர் அவர்.

அவருடைய ஒரே மகனுக்குப் பதினைந்து வயது பூர்த்தியானதும், அவருடைய மனதில் லேசான பயம் குடிகொண்டது.

காரணம் அவருடைய கணித முறைப்படி, ஜோதிட ஆராய்ச்சிப்படி, பதினாறுவது வயதில் அவருடைய ஒரே மகன் பாம்பு தீண்டி மரணம் அடைய வேண்டும் என்று இருந்தது; பதினாறும் வயதில் கொழுத்த ஆயுள் கண்டம்.

இந்த கண்டத்திலிருந்து தன் ஒரே மகன் தப்புவதற்கு ஏதேனும் வழி வகை உண்டா என்று அவனுடைய ஜாதகத்தை, தன்னுடைய ஜோதிட அறிவு முழுவதையும் பயன்படுத்தி, துருவித் துருவி ஆராய்ந்தார்.

ராலும் ஒன்றும் இயலாமல், எந்த மருந்துக்கும் கட்டுப்படாமல் பாம்பின் விஷம் இவருடைய மகனின் உயிரைக் குடித்தே விட்டது!

தன்னுடைய ஒரே மகனை இழந்த துயரம் ஒருபுறம் என்றால், தன்னுடைய கணிப்பு எப்படி பொய்யானது என்ற கவலை மறுபுறம் ஜோதிட விற்பன்னரை வாட்டி வதைத்தது.

குரு பார்த்தால் கோடி நன்மையாயிற்றே!

பின்னர் இது எப்படி நிகழ்ந்தது?

குரு பார்த்தும் மரணம் என்றால் இந்த சாஸ்திரங்கள் எல்லாம் பொய் என்றுதானே பொருள்.

ஜோதிட சாஸ்திரங்களைக் கற்றுத் தேர்ந்த என் கணிப்பு பொய் என்றால் இந்த சாஸ்திரங்களே பொய்தான் என்று தாளாத வெறுப்பு கொண்டார்.

தனக்கே இப்படி நேர்ந்ததால், இனி ஒருவர்க்கும் ஜோதிடம் சொல்வதில்லை என்ற முடிவுக்கு வந்தார். தன்வசம் உள்ள விலைமதிப்பில்லா அத்தனைச் சுவடிகளையும் தீக்கிரையாக்குவதென முடிவு கொண்டார்.

# யானைக்கும் அடி சறுக்கும்!

அப்பாடா! முடிவில் வழி கிடைத்து விட்டது. ஆயுட் ஸ்தானத்தை குரு பார்வையிடும்போது மரணம் எப்படி சம்பவிக்கும்?

நம்பிக்கை வித்து வேரூன்றி, விருட்சமாக வளர்ந்து, வியாபித்து நின்றது அவருடைய மனதில்.

எப்படியும் தன்னுடைய ஒரே மகன் இந்தக் கண்டத்தைத் தாண்டி விடுவான்; ஆல்போல் தழைத்துத் தன் வம்சத்தை வளர வைப்பான் என்று உறுதியாக நம்பினார்.

தானொன்று நினைக்க, விதி வேறொன்று நினைத்து விட்டது.

அந்தோ பரிதாபம்! குறிப்பிட்ட நாளில் அவருடைய குமாரனை எவ்வளவோ முன்னெச்சரிக்கையுடன் இருந்தும் பாம்பு தீண்டி விட்டது. முன் கூட்டியே இவர் தருவித்து வைத்திருந்த விஷக்கடி வைத்திய நிபுணர்கள் ஒருவ

தன்னுடைய மகனின் சடலத்தை ஒரு சிதையிலும், தன் வசமிருந்த அத்தனை நூல்களையும் மற்றொரு சிதையிலும் வைத்தார்.

மகனுடைய சடலத்திற்கு தீ மூட்டினார்; மற்றொரு சிதைக்கு தீ மூட்ட முனைந்தபோது ஒரு கை அவரைத் தடுத்தது. யாரென்று திரும்பிப் பார்த்தார். வெண்தாடியோடு கூடிய ஒருவர்— பழுத்த ஞானிபோல் தோற்றம் தந்த முதிர்ந்த கிழவர் ஒருவர் நின்றிருந்தார்.

''என்னப்பா விஷயம்? ஏனிப்படி?'' என்று கிழவர் வினவ, ஜோதிட விற்பன்னர் தன் கஷ்டத்தைக் குமுறித் தீர்த்தார்.

கிழவர் சொன்னார், ''ஜோதிட சாஸ்திரம் பொய்யல்ல; ஜோதிட சாஸ்திரம் ஒரு கடல் மாதிரி; ஒவ்வொரு ஜோதிடரும் கடல் நீரை ஒரு கை

ுள்ளிக் குடித்துவிட்டு, கடல் முழுவதை
ும் குடித்து விட்டேன் என்று சொல்
வது போலவே இருக்கிறது உன் வாதம்.
சிதைக்கு அப்புறம் தீ மூட்டலாம்.
நானே உதவி செய்கிறேன். இப்போது
ஒரு நிமிஷம் என்னுடன் வா. இப்படி
உட்கார்'' என்றார் கிழவர்.

கிழவரின் குரலில் என்ன மந்திர
சக்தியோ, ஜோதிடர் அவர் குரலுக்குக்
கட்டுப்பட்டு அவருடன் அங்கேயே
இடுகாட்டின் இடிந்த சமாதி ஒன்றின்
மேல் அமர்ந்தார்.

கிழவர் கேட்டார்: ''இப்போது
சொல். குரு ஆயுட் ஸ்தானத்தைப்
பார்த்தாரா?''

''நான் என்ன சொல்வது; இங்கே
பாருங்களேன். குரு பார்க்கிறாரா
இல்லையா?'' - ஜோதிடரின் பதிலில் சூடு
ஏறியது. ''இன்னும் இதெல்லாம் சாஸ்
திரம் என்று என்னை நம்பச் சொல்கிறீர்
களா?'' என்றார் ஜோதிடர்.

கிழவர் கேட்டார், ''மனிதர்களுக்கு
உள்ளது போலவே கிரகங்களுக்கும்
நித்ய கர்மாக்கள் உண்டென்பது
தெரியுமா உனக்கு?''

''ஓ! தெரியுமே! விழிப்பது முதல்
ஸ்நானம் செய்வது... சபாபிரவேசம்
செய்வது, கிரீடம் அணிவது, கண்ணாடி
யில் அழகு பார்ப்பது, அதிகாரம்
செய்வது. துயில் கொள்வது... இப்படி
இருபத்தேழு நித்ய கர்மாக்கள் ஒவ்
வொரு கிரகத்திற்கும் உண்டு'' — என்றார்
ஜோதிடர்.

''உன் மகன் ஜனித்தபோது குரு
செய்து கொண்டிருந்த நித்யகர்மா
என்ன?'' என்று கேட்டார் கிழவர்.

''உறங்கிக் கொண்டிருக்கிறார்'' என்
றார் ஜோதிடர்.

''தூங்கிக் கொண்டிருக்கும்போது
உன்னால் பார்க்க முடியுமா? — துயில்
கொண்டிருக்கும் குரு எப்படி ஐயா
ஆயுட் ஸ்தானத்தைப் பார்க்க முடியும்?
குரு பார்ப்பதாக நீர் போட்ட குருட்டுக்
கணக்கிற்கு ஜோதிட சாஸ்திரம் எப்படி
ஐயா பொறுப்பாகும்?'' என்றார்
கிழவர். ''இப்போது உனக்கு இந்த விலை
மதிப்பில்லாச் சுவடிகளைக் கொளுத்திப்
போட வேண்டுமென்றால் கொளுத்திப்
போடு. எனக்கொன்றும் ஆட்சேபணை
இல்லை'' என்றபடி கிழவர் புறப்பட்
டார்.

ஜோதிட விற்பன்னருக்குக் கிழவரின்
வியாக்யானம் பொட்டில் அடித்தது
போல உறைத்தது. எல்லாம் கற்றோம்
என்ற மமதையையும் ஒழித்தார்; சுவடி
களையும் பாதுகாத்தார். ஜோதிட சாஸ்
திரத்தின் அருமை, பெருமைகளைத் தன்னி
டம் வந்தவர்க்கெல்லாம் எடுத்துரைத்துத்
தம் எஞ்சிய நாளைக் கழித்தார்.

**—என். எஸ். மணி**

## மந்திரவாதி ஜாதகம்!

ஒருவன் மந்திரவாதியாகத் திகழ
வேண்டுமானாலும் அவன் ஜாதக
யோகம் நன்றாக இருக்க வேண்டும்.

அஷ்டமாதிபதியும் இலக்கினாதிபதி
யும் ஒரு இராசியிலே இருக்கும்போது,
அவர்களுடன் செவ்வாய் சேர்ந்து இருந்
தாலும் அல்லது பார்த்தாலும் அவர்
கள் நின்ற ராசி பகை வீடாயிருந்
தாலும் அந்த ஜாதகன் துஷ்ட தெய்வங்
களை பூஜித்து சூன்ய வித்தைகளைக்
கற்றுக்கொண்டு மனிதர்களை சூது
மார்க்கமாய் வியாதியால் கஷ்டப்
படுத்துவதும், கொல்லுவதுமாய் இருப்
பான்.

இராசி நாதனும் சுகாதிபதியும்
சப்தம ஸ்தானாதிபதியும் சுபக் கிரக
மாயிருந்து, அவர்கள் ஓர் இராசியிலி
ருந்து இலக்கினத்தைப் பார்த்தாலும்,
சேர்ந்தாலும், மாந்திரீக வித்தை
கற்றவனாக இருப்பான். இந்த மந்திர
வாதி பில்லி சூனியங்களை எடுத்துவிட்டு
மனிதர்களுக்கு நன்மை செய்யும்
பரோபகாரியென்று பலரும் புகழும்
கீர்த்தியுடன் விளங்குவான்.

**—தி. முத்துக்குமாரசுவாமி**

## அட்டையில்...

காஞ்சி முனிவரின் அற்புதமான
தோற்றம்.

**வண்ணப்படம் : ஹரலிங்கம்**

**2 — வது அட்டையில்...**

திருச்சியை அடுத்த அல்லூரில்
குடிகொண்டிருக்கும் நவக்கிரக நாய
கர்களுள் ஒருவரான ராகு பக
வானின் தோற்றம்.

**படம் : புஷ்பத்துறை சுப்ரமண்யம்**

PUBLISHER'S PAGE

# மலாக்கா செட்டியார்கள்

மலேசியர்களிடையே ஒரு தனி வகுப்பினர் மலாக்கா செட்டியார்கள். பெயர்தான் செட்டியாரே தவிர அவர்களிடையே நாயக்கர், பிள்ளைமார், பத்தர், முதலியார் எல்லாரும் இருக்கிறார்கள். ஆனால் மொத்தமாகச் செட்டியார் என்றுதான் அழைக்கிறார்கள்.

அவர்கள் நடத்தும் தேவார வகுப்பு ஒன்றைப் பார்க்க நான் போயிருந்தேன். அங்கே இருந்த இளைஞர்களைப் பார்த்தபோது, என்னால் என் கண்களையே நம்ப முடியவில்லை. டைட் பாண்ட்ஸ், ஸைட் பர்ன்ஸ், ஸ்போர்ட்ஸ் ஷர்ட் என்று வெகு நாகரிகமான உடை! ஆனாலும் தேவாரத்தை ஆர்வத்துடன் படித்துக் கொண்டிருந்தார்கள். அவர்களுடைய உள்ளம் அதில் தோய்ந்திருந்தது. ஆங்கில எழுத்தில் தமிழ் உச்சரிப்பை எழுதி வைத்துக்கொண்டு பாடினார்கள். ஆனால் இசை மாறவில்லை. வெள்ளி, சனிக்கிழமைகளில் அவர்களுக்காகச் சமய வகுப்புகளையும் நடத்துகிறார்கள்.

சில கோயில்களுக்குச் சென்றேன். விளம்பரப் பலகைகளை மலாய் மொழியில் எழுதி வைத்திருக்கிறார்கள். கோயிலுக்கு வரும் செட்டியார்கள் மலாய் மொழியிலேயே உரையாடுகிறார்கள். ஆனால் இடையிடையே சூடம், சாம்பிராணி, பூஜை என்ற தமிழ்ச் சொற்களை அப்படி அப்படியே புழங்குகிறார்கள்.

மற்றொரு குடும்பத்திற்குச் சென்றேன். வீட்டில் முருகன், விநாயகர், சரஸ்வதி படங்கள் வைக்கப்பட்டிருந்தன. வீட்டுத் தலைவர் பழனி படையாச்சி எங்களை மகிழ்ச்சியுடன் வரவேற்றார். படையாச்சியானாலும் இவரும் மலாக்கா செட்டியார்தான். செட்டியார்களின் தொழிலைப்பற்றி அவரிடம் கேட்டேன். விவசாயத்தில் பலர் ஈடுபட்டிருக்கிறார்கள். இளைஞர்கள் படித்துவிட்டு அரசாங்க உத்தியோகத்துக்குப் போகிறார்கள்.

நான் சில நிமிடங்கள் சிந்தித்தேன். தமிழ்ப் பண்பாட்டையும், சமயத்தையும் கட்டிக் காத்து வரும் இவர்கள், தமிழ் மொழி பேச முடியாதவர்களாக இருக்கிறார்களே? இவர்களுடைய பரம்பரை எப்படி இருக்கும்? கேரளத்தில் இருக்கும் யூதர்கள் ஹீப்ரு மொழி தெரியாமல் மலையாளத்தில் வழிபாடு செய்கிறார்கள். ஆனால் மலாக்கா செட்டியார்கள் தமிழ் மொழி தெரியாவிட்டாலும், தமிழ் மொழியின் வழிப்படி, தமிழ் நாட்டு முறைப்படிதான் வழிபடுகிறார்கள்.

ஒரு தனி சமூகமாக ஒதுங்கிப் போவதில், உடனடியாகப் பிரச்சினைகள் தென்படாவிட்டாலும், பிற்காலத்தில் அவற்றைச் சந்திக்க வேண்டியிருக்கிறது. மொழி என்ற அடையாளத்திலிருந்து மலாக்கா செட்டியார்கள் விலகிப் போயிருக்கிறார்கள். ஆனால் இதயம் மாறி விடவில்லை. மொழிப் பிணைப்பு எந்த அளவுக்கு ஒரு சமூகத்துக்கு அவசியம் என்பதை இவர்களை பார்க்கிறவர்கள் உணர்ந்து கொள்ளலாம்.

''செட்டியார் ஐயா! தமிழ்நாட்டுக்கு வாருங்களேன்'' என்று அழைத்தேன். பழனி படையாச்சி புன்னகை புரிந்தார்.

''முருகன்தான் உங்களை இங்கே அனுப்பி இருக்கிறார். உங்களைப் பார்த்ததில் எனக்கு மகிழ்ச்சி. தமிழ்நாட்டைப் பார்த்தாற்போல இருக்கிறது. நிறையத் தமிழர்களை இங்கே அனுப்பி வையுங்கள்!'' என்றார் அவர்.

மணியன்

தி இதயம் பிரிண்டர்ஸில் அச்சிடுபவர் ஜி. எம். குளத்து. இதயம் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட், சார்பாக வெளியிடுபவர் மணியன். ஆசிரியர்: பாலஜோசியர் (வித்வான் வே. லட்சுமணன்), அமைப்பு: மாயா. முகவரி: 98, மவுண்ட் ரோடு, தபால் பை 1159, கிண்டி, சென்னை-600 032.